பாரிஸ்டர்

# வீர சவர்க்கார்.

(முதற் பாகம்)

எழுதியது,
பன்னூலாசிரியர்,
**திரு. தினகரன் அவர்கள்.**



பதிப்பாசிரியர்,
கு. ஆறுமுகம்,
பசும்பொன்.

சங்கநாதம்—5.

பாரிஸ்டர்

# வீர சவர்க்கார்.

(முதற் பாகம்)

எழுதியது,

பன்னூலாசிரியர்,

திரு. தினகரன் அவர்கள்.

பதிப்பாசிரியர்,

கு. ஆறுமுகம்,

பசும்பொன்.

மதுரை, V. சுப்புராயலு நாயுடு பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.

1940.

 [விலை அணா 4.

## எனது நன்றி.

---

நூல் வெளியீட்டில், உதவியும், ஊக்கமுந் தந்து, என்னை வெளிவரச் செய்த நண்பர்—இளம் வாலிபர்—வீர திலகம்–ஸ்ரீமாந் T. S. சேது முதலியா ரவர்களுக்கு, நான் என்றும் கடப்பா டுடையேன். *பதிப்பாசிரியன்.*

புத்தகம் கிடைக்குமிடம்:-

போறுப்பாளர்,

***மின்சார இலவம் பஞ்சாலை,***

35, *வெங்கலக்கடைத் தெரு,*

**மதுரை.**

# முகவுரை.



வீர சுதந்திரம் வேண்டி நின்றவர், விநாயக தாமோதர சாவர்க்கர். மார்பில் அதிர்ச்சியையும், மனதிற் கொந்தளிப்பையும் உண்டாக்கும் இவரது வாழ்க்கை வரலாறு, இதுவரை, தமிழில், இவ்வளவு விவரமாய் வரவில்லை. இந்நூல் அக்குறையை நீக்குமென நினைக்கிறேன்.

தியாகத்தின் உச்சியேறிய இவரது சரிதம், பண்டிதருக்கும், பாமரருக்கும் ஆனந்தத்தை யளிக்குமென்பதற்கு ஐயமில்லை. எளிய நடையில், விறுவிறுப்பும், சுருசுருப்புங் காணப்படுகிறது. போக்கு, பெரும்பாலும் பிரசங்க தோரணை. சுதந்திரச்சுவை யனுபவிக்க இது ஒரு சாதனமாகும்.

இப் பெரியாரின் சரிதை, பகுதியாய் வருவதைப்பார்க்கிலும், தொகுதியாய் வெளியிடுவது உசிதமாயிருக்கும்.

வளர்ச்சியை விரும்பும் வீர வாலிபர்கள், எம் மரபினராயினும், எம் மதத்தினராயினுஞ்சரி, இச்சிறுநூலைப் படித்துப் பயன் பெறுவார்களென்று நிச்சயமாக நம்புகிறேன்.

மு. பட்டாபிராமன்.

14—8—40

# பதிப்புரை.

---

இவ் இதிகாச நாயகன்—விநாயக தாமோதர சவர்க்கார், தனிப் பெருந் தியாக மூர்த்தி என்று சரித்திரம் பேசுகிறது. "இவரது ஜீவியம்; இமயமலையின் சிகரத்தைப்போல் எட்டமுடியாததாய்க், கடலின் ஆழத்தைப்போற் காண வொண்ணாததாய், அக்கினி மலையைப்போல் அணுக இயலாததாய் இருக்கிற"தென்று இந்நூல் கூறுகிறது.

அகில இந்தியாவிலும் பிரவகித்துக் கொண்டிருக்கும் இவர்தம் புகழ்ப் பிரவாகம், எதிர்கால வளர்ச்சியை நாடும், நவயுக வாலிபர்களின் இளஞ் சிந்தையிற் பாய்ந்து, மலர்ச்சியைச் செய்யுமென்று மதிக்கிறேன்.

இத்தகைய நூல்களைப் பரப்பவேண்டுமென்பதே எனது அவா. தமிழர்கள் இதைப் பூர்த்திசெய்து வைக்கவேண்டும். கைங்கரியத்துக்கு நான்; ஆதரவுக்கு நீங்கள். தலைவணங்கிக் கேட்கிறேன்.

விரும்பிய மாத்திரத்தில், இந் நூலை எழுதி உதவிய நண்பரும், பன்னூலாசிரியரும், இந்நூலாசிரியருமான **திரு. தினகரன**வர்களுக்கு எனது நன்றி உரியது.

மதிக்கத் தக்க சில நேரத்தை, இந் நூலுக்காகச் செலவழித்து, முகவுரை வழங்கியவர்—அடக்கமுடைய நிறைந்த அறிவாளர்—சிறந்த தியாகி—**ஸ்ரீமாந் மு. பட்டாபிராமையா** அவர்களுக்கு எனது அன்பே காணிக்கை.

காகிதக் கிராக்கியால், பொருள் முடையால் இந்நூல், இரு பகுதியாய் வருகிறது. நாடு மன்னிக்கவேண்டும்!

**பதிப் பாசிரியன்.**

15—8—40

# இவர் யார் தெரியுமா?

---

இந்தியா தன் சுதந்திரத்தை ஏன் இழந்தது, எப்படி இழந்தது என்பன இங்கு பொருத்தமில்லாமற் போகாது. கதைக்குக் கால் வேண்டுமென்கிற காரணத்தைக் காரியமாய் வைத்துப்பார்த்தால், நாம் எழுதப்போகிற இந்த இதிகாச நாயகன், இந்தியாவின் சுதந்திரச் சேனபதியாய் ஏன் அஸ்திர தாரியானன் என்பதும், ஏன் சுயராஜ்ய லட்சிய வீரனனென்பதும் புலனகும்.

இந்தியா பெரிய தேசம்; சிறிதாகவும், பெரிதாகவும் எத்தனையோ ராஜ்யங்கள் இதில் அடங்கி இருக்கின்றன— இப்போது பிரிட்டிஷ் ராஜாங்கம் இங்கு நடந்தாலும், எத்தனையோ சுதேச சமஸ்தானங்கள் இருப்பதுபோல். இந்த அரசாங்கங்கள் எக்காலத்திலும் ஒன்ருேடொன்று ஒற்றுமையாய் இருந்து அரசுபுரியவில்லை.

சகுந்தலை பெற்ற சூரப் பிள்ளையான பரதன், தெற்கே கன்னியாகுமரியிலிருந்து வடக்கே இமயமலை வரை, மேற்கே காந்தாரத்திலிருந்து கிழக்கே பிர்மதேசம் வரை ஹிந்துஸ்தானம் முழுதையும் ஒன்றுசேர்த்து ஓர்குடைக்கீழ் அரசாண்டான். இந்தியாவுக்குப் பரதக்கண்டமென்று பேர் வந்தது. பாரதவர்ஷம், பாரதநாடு, பரதபூமி என்கிற பெயர்களுமுண்டு.

பாரததேசம் தனதான்ய சம்பூர்ணமானது. அகிலப் பிரசித்திபெற்ற ஆரியநாகரீகத்தின்மீது பொருமையும், ஆரியா வர்த்தத்தின் ஐஸ்வரியமீது ஆசையும் ஏற்பட்டு, கிரேக்க அரசனுன மகா அலெக்ஸாந்தர் இந்தியாவின்மேற் படை யெடுத்தான். சீலம் நதிக்கரையில் சீரிய சமர்நெறிக்கு விரோதமாய்ப் புருஷோத்தமன் தோற்கடிக்கப்பட்டதும் எல்லா இந்தியமன்னர்களும் யௌவன ராஜனுக்குத் தலை வணங்கிவிட்டார்கள். விஸ்வ விஜயீதரனுன அலெக்ஸாந்தர், தனது சேனுபதியான ஸெல்யூக்கஸை ராஜப்பிரதிநிதியாய் இந்தியாவில் வைத்துவிட்டுச் சுதேசம் போனுன். நந்த வம்ஸத்தைக் கருவறுத்த மௌரிய குலதிபனுன சந்திரகுப்தன், பாரத சிம்மாசன மேறியதும், சாணக்கியனுடைய சாமர்த்திய சாகசத்தால், ஸெல்யூக்கஸின் சீமந்தபுத்திரி ஹெலனுவைக் கல்யாணஞ்செய்து, அந்த சம்பந்தத்தின் மூலமாய் இந்தியாவின் பராதினத்தை யொழித்தான். பின்னர் நாதிர்ஷா, நொண்டித் தைமூர் முதலியவர்களின் கொள்ளையடிப்பும், மொகலாயர்களின் படையெடுப்பும் நடந்தது.

கொள்ளையடிப் பிருக்கட்டும், படையெடுப்பைப் பார்ப் போம். மொகலாயர்கள் இந்தியர்களை வென்றூர்கள். ஆனல் இந்தியச் செல்வத்தை எங்காவது கொண்டுபோனுர்களா? ஆண்டு அனுபவித்தார்கள். அந்த அனுபவம் அவர்களை போகவிலாசமாகிற அந்தகாரத்தில்—அதிகார மமதையில் அமிழ்த்திவிட்டது. ஆரம்பத்தில் மொகலாயர்கள் அந்நியர்களாய்ப் பாவிக்கப்பட்டாலும், நாளடைவில் இந்தியர்களோடு விவாகம் முதலிய சகல சம்பந்தங்களுங் கொண்டு இந்தியர்களாகவே மாறிவிட்டார்கள்.

இம் மாற்றம் பரிபூர்த்தியாகிற இறுதிவரை, இரண்டு சக்திகள் மொகல் வெள்ளத்தை எதிர்த்து நின்றன. ஒன்று வடக்கே ராஜபுதானத்தில் ரஜபுத்திர சக்தி; மற்றொன்று தெற்கே மஹாராஷ்டிரத்தில் மராத்திய சக்தி. ரஜபுத்திர சக்தியில் ராணு பிரதாப சிம்மனும், மராத்திய சக்தியில் க்ஷத்திரபதி சிவாஜியும் வீரமா மலையின் சிகரமேறிக் கீர்த்திக் கிரீடம் அணிந்து சரித்திரச் சிரஞ்சீவிகளா யிருக்கிறார்கள்.

மொகலாயர்கள் இந்தியாவில் ஸ்திரமாய் நிலைத்துவிட்ட பின்னும், மேலே கூறியுள்ள அந்த இரண்டு வீரசக்திகளும், புயற்காற்றைப்போலும் பூகம்பத்தைப்போலும் மொகலாயர்களை மோதி நின்றன. இவ்வெதிர்ப்பு ஏககாலத்தில் நடந்தது. இரு சக்திகளும் தனித்தனியாய்த் தாக்கின. ரஜபுத்திரர். மராத்தியராகிற இரு ஜாதியும் சேர்ந்து போர்புரியவில்லை. இதுதான் இந்தியாவின் அதிர்ஷ்டஹீனம். இந்த இடத்திலே தான் இந்தியா தோற்றது. * **ராட்டூர்வீரன் துர்காதாஸ்** (மார்வார சேனாதிபதி), சிவாஜி மைந்தன் **சாம்பாஜி** யைப் படைத்துணை கேட்டபோது, பின்னவன் பேதைமதியால் மறுத்துவிட்டான். மராத்திய சாம்ராஜ்யமும் வீழ்ந்தது; மார்வார சாம்ராஜ்யமும் வீழ்ந்தது. மொகல் ராஜ்யமாவது மிஞ்சிற்றா? அதுவும் பஹதூர்ஷா காலத்திற் பறிபோயிற்று.

வீரத்தில், மராத்தியர்க்கும் ரஜபுத்திரர்க்கும் வித்தியாசமில்லை — வீரசாதனையில் வேறுபட் டிருந்தனர். ரஜபுத்திரர்கள் போரில் முன்னேறிப் பாய்வார்கள் — ஜெயம் அல்லது

---

* ராட்டூர்வீரன் துர்காதாஸ் என்பது, இந்நூலாசிரியர்-தினக்ரனவர்களால் எழுதி வெளிவரப்பெற்றது.

சாவு இரண்டிலொன்றைத் தவிர, தற்காலிகமாய்த் திரும்பிச், சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துப் புறங்காட்டிப் போவது என்கிற வியவகாரமே அவர்களிடமில்லை. மராத்தியர் அப்படியல்ல. பின்னடைவார்கள்; சைனியசேகரஞ் செய்வார்கள்; மறு படியும் போர்புரிவார்கள். இதுதான் சிவாஜியின் போர் முறை. இம்முறையை அனுஷ்டித்துத்தான் க்ஷத்திரபதி தன் சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தான். அதனாலேதான் சிவாஜியை, அவன் சத்துருக்கள் "மலை எலி" என்று அழைத்தனர். மலை எலி மகுடஞ் சூட்டிக்கொண்டது. அந்தக் கதை வேறு; அதன் வம்ஸ வல்லியிலேதான் இக் கதையுடை நாயகன் (சவர்க்கார்) அவதரித்தான்.

ஐரோப்பாவிலிருந்து ஒரு சூறைக்காற்று வந்தது. வெட்டுக் கிளியும், விட்டிற்பூச்சியும் படைபடையாய் வருவதுபோல் வர்த்தகக் கூட்டம் வகைவகையாய் வந்தது: டச்சுக்காரர்கள், உலாந்தியர், பிரெஞ்சுக்காரர், பிரிட்டிஷார். இப்படி வந்த வியாபாரிகளில், டச்சுக்காரர்களைப் பிரெஞ்சுக்காரர்களும், பிரெஞ்சுக்காரர்களைப் பிரிட்டிஷ்காரர்களும் வென்று, இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்துக்கொண்டார்கள். அது முதல், தேசத்தின் கைத்தொழிலும், வர்த்தகமும் தேச மக்களின் கையைவிட்டு மாறி, இந்தியா, இங்கிலாந்தின் சந்தையாகிவிட்டது. உரிமைகள் பறிபோயின: கல்வி கரைந்தது; செல்வஞ் சிதைந்தது; நாகரிகம் நாசமாயிற்று. நாட்டு மக்கள் நாயினுங் கேடாயினர்.

இவ்வளவு மானஹீனமும், மொகலாயர்கள், வெள்ளைக்காரர்களுக்குக் கோட்டைவிட்டதாலேற்பட்டதென்று சிலர்

சொல்லக்கூடும். அதுவும் ஒரு காரணந்தான். அதைவிடப் பிரமாதமானதும், பிரதமமானதுமான காரணம், இந்தியரின் ஒற்றுமை யின்மைதான்.

கும்பினியார் (கிழக்கிந்தியக் கம்பெனியார்) இந்தியாவை ஆண்ட காலத்தில், தேச மக்களுக்கேற்பட்ட குறைகளுக்குக் கணக்கில்லை. அவைகளை எவ்வளவு காலந்தான் சகிக்கலாம்? சாந்த மிருகங்கள்கூட, அளவுக்கு மிஞ்சி ஹிம்சிக்கப்பட்டால் மனிதனுடைய கட்டுக் காவலைக் கடந்துவிடுவதில்லையா? தண்ணீரும், தன்போக்கிலிருந்து தடுக்கப்பட்டால் அணைகளை அடிக்கடி மோதி உடைக்கின்றதன்றோ? மனிதன் மனிதனால் அடக்கியாளப்படும்போது, அவன் தனது சுதந்திரத்துக்காகப் போராடாமல் எப்படி யிருப்பான்? 1857-ல் இந்தியர்கள் தங்கள் முதற் சுதந்திர யுத்தத்தை ஆரம்பித்தார்கள். அதில் இந்தியா தோற்றது வாஸ்தவம். தேசத்திற் பெரிய தீ மூட்டி யிருக்கிறதா இல்லையா? தேச பக்த வெள்ளத்தைத் தேச மக்களின் மனதிற் பிரவஹிக்கச் செய்ததா இல்லையா?

முப்பது வருஷங்கள் (1857—1887) தேச முழுதிலும் தயாரிப்பு நடந்தது. நஷ்டமடைந்திருக்கிற வீர குலத்தைப் புனருத்தாரணஞ் செய்வதற்காகவும், தேச பக்த சமாஜத்தைச் சிருஷ்டிப்பதற்காகவும், பாரத மாதாவின் பாத பூஜைக்கு வேண்டிய சாமக்கிரியைகளைச் சேகரிப்பதற்காகவும் ஆங்காங்கு அவதாரங்கள் ஆகிக்கொண்டிருந்தன. விநாயக தாமோதர சவர்க்கார் ஓர் அவதார புருஷர். அவதார மகிமைகள் அனைத்தும் அவரிடம் அப்படியே அமைந்திருக்கின்றன.

சவர்க்காரின் சரித்திரம் சாதாரணமானதல்ல—பூகம்பத்திலே பிறந்து, புயற் காற்றிலே வளர்ந்தது. இமயமலையின் சிகரத்தைப் போல் அறியமுடியாததாயும், சமுத்திரத்தின் ஆழத்தைப்போல் அந்தரங்கமானதாகவும், அக்கினியைப் போல் அணுக முடியாததாகவும் அது இருக்கிறது.

அப்பேர்ப்பட்ட அபூர்வ வாழ்க்கையை யறிய இந்தியா எவ்வளவோ அவாவுகிறது! காலம் வரவேண்டும்—அரசியல் ரகசியங்கள், பயமின்றிப் பரகசியப்படுத்தக்கூடிய காலம் எதிரே இருக்கிறது. எந்த அரசாங்கத்துக்கு விரோதமாய்ச் சவர்க்கார் புரட்சி செய்தாரோ, எந்த அரசாங்கத்தை அகற்றிச் சுயராஜ்யத்தை ஸ்தாபிக்க அவர் பால்ய முதற் பாடு பட்டாரோ, எந்த அரசாங்கம் அவரைப் பதினன்கு வருஷங்கள் அந்தமான் வாசமும், பதினலு வருஷங்கள் இரத்தினகிரியில் அஞ்ஞாத வாசமும் செய்ய வைத்ததோ, அந்த அன்னிய அரசாங்கம் இந்தியாவி லிருக்கும்வரை, அவரைப் பற்றிய அனேக இரகசியங்கள் வெளிப்படுத்தப்படாமல் புதிராகவே இருக்கவேண்டும். இது இந்தியாவின் தலைவிதிமாத்திரமல்ல; அடிமைப்பட்ட எல்லாத் தேசங்களின் தலைவிதியும் இதுதான்.

விநாயக தாமோதர சவர்க்கார், வெறுந் தேச பக்தர் மாத்திரமல்ல. இயற்கைக் கவிஞராகவும், இணையற்ற நூலாசிரியராகவும், உண்மை ஹிந்துவாகவும் இருக்கிறார். அவருடைய கவிகளில் தேசாவேசம் துள்ளுகிறது. எழுத்தில் வீரம் பொங்குகிறது. * அந்தமானிலிருந்து ஒரு எதிரொலி மின்னொளிபோல் வருகிறது.

* இது அந்தமானிலிருந்து சவர்க்காரால் எழுதப்பட்ட கடிதங்களின் திரட்டு.

"சாவே வா" என்கிற கட்டுரையை, மாதிரிக்காக, அந்தமான் வாசம் என்னும் 18-வது அத்தியாயத்தில் அப்படியே தருகிறோம். எதிரொலியில் இது ஒன்று.

1857 அல்லது இந்தியாவின் சுதந்திரப் போர் என்னும் சரித்திர நூலைச் சவர்க்கார், பூகம்பமாகிற ஏடுகளில், எரிமலையின் குழம்பாகிற மையினாலும், புயற்காற்றாகிற பேனாவினாலும் எழுதியிருக்கிறார். அது பிரசுரமாகவில்லை—அச்சாவதற்கு முன்னர், அரசாங்கம் அதைப் பறிமுதல் செய்துவிட்டது. ஹிந்துத்துவம், ஹிந்து-பதபதஷாஹி அல்லது ஹிந்து ராஜரீகம் என்னும் நூல்களும் அவரால் எழுதப்பட்டிருக்கின்றன.

புத்தம் புதிய கொள்கைகளை யுற்பத்திபண்ணிய மனிதர்கள், பிணி மூப்புச் சாக்காடு எய்தினாலும், அவர்கள் வனைந்த தத்துவங்கள் எப்பொழுதும் யௌவனத் தன்மை வாய்ந்தனவாகவே யிருக்கின்றன. சவர்க்காரின் புரட்சிக் கொள்கை—இரத்தஞ் சிந்திச் சுயராஜ்ய மடையுமார்க்கம், இப்பொழுதைய இந்திய ராஜீயவாதிகளால் பெரும்பாலாய் அனுஷ்டிக்கப்படாவிட்டாலும், சுதந்திரம் பெறும் முடிவான முறை அதுதான் என்று எண்ணுகிறவர்களும் அஹிம்ஸாவாதிகளில் அனேகர் இருக்கிறார்கள். மகாத்மா காந்தியின் சத்தியாக்கிரக வழி, தேசத்தைத் தயாரிக்கும் அளவோடு சரி யென்பது பலர் அபிப்பிராயம். சம அந்தஸ்திலிருக்கிற இருவர் வேண்டுமானால் சமாதான முறையிற் சந்திக்கலாம். மாறுபட்ட அபிப்பிராயமுடையவர்களுக்குள் சமாதானமாவது; சந்தியாவது? கையுங் கையுஞ் சந்திக்கலாம்; காலுந் தலையும் ஓரிடத்திற் சந்திக்க முடியுமா?

பாரிஸ்டர்சவர்க்காரின் பிரகிருதி, புரட்சித்தன்மையுடையது. அதிபால்ய முதல் அவர் சேதனம், புரட்சித் தன்மையிலேயே வேரூன்றி வளர்ந்தது. க்ஷத்திரபதி சிவாஜியையும், மகாத்மா மாஜினியையும் சவர்க்கார் குருவாகக்கொண்டு தேசீயத்தைப் பயின்றார். கரிபால்தியைப்போற் சுதந்திரச் சேனையை நடத்திச் சுதந்திர யுத்தம் புரியவேண்டுமென்று அவர் விரும்பினார். விருப்பம் விழுமியது; வீரம் விபுலமுடையது.

தெய்வம், தேசம், தர்மம் என்று மூன்றுபக்திகள் உலகத்திற் பரவியிருக்கின்றன. பக்தியிலிருந்து சக்தியுண்டாகிறது. சவர்க்காரிடம் எவ்வளக் கெவ்வளவு தேசபக்தி யிருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு தெய்வபக்தியும் தர்மமாகிற மதபக்தியுமிருக்கிறது. ஹிந்துஸ்தானம் ஹிந்துக்களுடையதென்று சொந்தம் பாராட்டினாலும், இங்குவந்து குடியேறியிருக்கிற அல்லது இங்கு பிறந்து வளர்ந்து மதமாறி யிருக்கிற பிறமதஸ்தர்களுக்கு இந்தியாவி லிடமில்லையென்று அவர் மறுக்கவில்லை. மத சுதந்திரத்துக்காகச் சவர்க்கார் சிறுவயதில் சண்டைசெய்தாரென்று சரித்திரத்தி லிருந்தாலும், அவர் பிறமத விரோதியல்ல; எல்லாமதங்களிலும் உண்மையிருக்கிறதென்னும் சமரச நோக்குடையவர்.

குரு சிஷ்ய பாவத்தில், இரண்டோரிடங்களில், திலகரையும் சவர்க்கார் கடந்திருக்கிறார். கொள்கையிற் கோடிவித்தியாச மிருந்தாலும், கோகுலர், சவர்க்காரைவீரப்பிறவியென்று வியந்து புகழ்ந்திருக்கிறார். திலகரின் மாப்பிள்ளையான கேல்கார் எவ்வாறு வீரவணக்கஞ் செய்கிறாரென்று பாருங்கள்:—

"அகில உலக முழுதும் அதிர்ந்துகொண்டிருக்கிற அவர் தம் புகழ்ப்பிரவாகமும் வீரப்பிரதாபமும், அரசியலில் அபிப்பிராய பேதப்பட்டிருக்கிற என்னையும் வியப்புறச்செய்தது. சவர்க்காரின் தேசியமுறை, அயர்லாந்தின் தேசியமுறையைத் தழுவியது. அயல்நாட்டவரின் தேசாபிமானத்தையும், அவர் தம் வீர தீரச் செயல்களையும் வியந்துபேசுகிற நாம், நமது சொந்த நாட்டாரின் தேசபக்தியையும் தியாக சக்தியையும் புகழவில்லையானல் என்ன பயன்? சுவர்கீய கோகுலர், சவர்க்காரின் தேசீய முறையை அரசியல் ஆக்கமற்றதென்று அருவெறுத்தாராயினும், அவர் தம் அசகாய சூரத்துவத்தை அபாரமாய்ப் புகழ்ந்துபேசியதை அடிக்கடி நான் கேட்டிருக்கிறேன்.

"அரசியல் ஸ்பரஸ்பரஒத்துழைப்பில் அவருக்குப் பூரண நம்பிக்கையுண்டு. ஒழுங்கான ஒரு அரசியலேற்பட்டால் அதிற்சேர்ந்து உழைக்க அவர் ஒருக்காலும் பின்வாங்க மாட்டார். இப்போதைய சட்டசபைகளிலும் சந்தோஷமாகச் சேர்ந்து, தேசிய முன்னேற்றத்துறையில் சீர்திருத்தங்களை வைத்து வெற்றிகரமாய் வேலைசெய்ய முடியுமானல் அதற்கும் அவர் பின்னடையமாட்டார். ஐரோப்பாவில் இதற்கு அத்தாட்சியாய் அநேகரைக் குறிப்பிடலாம். ஒருசமயம் புரட்சித் தலைவர்களாயிருந்து, பின்னர் அரசியல் ஒத்துழைப்பாளிகளான பலரோடு சவர்க்காரை ஒப்பிடலாம். சக்கிரவர்த்திக்கு விரோதமாய்ப் படையெடுத்ததாகத் தூக்குத்தண்டனை விதிக்கப்பட்ட பிரசித்திபெற்ற புரட்சிக்காரனை ஸர் சார்லஸ் கோவன் ஜாபி, ஆஸ்திரேலியாவின் பிரதம மந்திரியாகவில்லையா? மரணதண்டனை விதிக்கப்பெற்ற கலகக்காரனை

கரிபால்தி, இத்தாலியின் விடுதலை வீரனாகி, சிஸிலியையும்; நேப்பிள்ஸையும் ஜெயித்து, அவற்றை பீடுமாண்ட் மன்னனிடம் ஒப்படைத்த கதை, இங்குப் பொருத்தமான உவமானமாகிறது. கலகக்காரனும், காவலனும் (அரசனும்)—அரசாங்கத்துக்கு விரோதமாய் ஆயுதமெடுத்தகுற்றத்திற்காகத் தூக்கு மேடையில் தூங்கவேண்டிய கரிபால்தியும், விக்டர் எம்மானுவேலும் ராஜரதத்திற் சரியாசனத்தமர்ந்து, அன்பு ததும்பிய பிரஜைகள் ஆரவாரிக்க, வெற்றி விபுலர்களாய் நகர்ப்பிரவேசமானார்கள்.

"எண்பதாவது வயதில் ஸ்ரீலஸ்ரீ தாதாபாய் நௌரோஜி, "வாலிபனாயிருந்தால் நான் ஆயுதமெடுத்துப் போர்புரிவேன்'' என்று கூறினார். விநாயக தாமோதர சவர்க்கார், இளம்பிராயத்திலேயே புரட்சியில் இறங்கிவிட்டார். பிற்காலத்தில் அவர் இந்திய அரசாங்கத்தில் ஓர் மந்திரியாயிருக்கக்கூடும். இந்தியாவின்இளஞ்சந்ததி அப்பேர்ப்பட்டவீரனை மந்திரியாய் வைத்துக்கொள்ள விரும்புமா? பலத்த பந்தோபஸ்தில், கைதியாய் இந்தியாவுக்குக் கப்பலிற் கொண்டுவரப்படும்போது, கடலிற் குதித்த காண்டீபனைக் காண, எந்த அரசாங்கம்அஞ்சாதிருக்க முடியும்? ஆயிரக்கணக்கான மந்திரிகள் கிடைப்பது அரிதல்ல. அவர்களில் எத்தனைபேர் ஒரு கொள்கைக்காக உயிரைப்பரவாயில்லையென்று துணிந்தவர்களாயிருப்பார்கள்? எத்தனை பேர் சாச்வதமான சரித்திரத் துணிவோடு அகில உலகத்தையும் ஆட்டி அசைத்தவர்களாயிருப்பார்கள்? யுத்த முடிவில் இந்தியாவைச் சர்வதேச சங்கத்தில் பிரதிநிதித்துவம் வஹிக்கச்செய்த கௌரவத்தில், இந்திய அரசாங்கம் தற்பெருமை கொள்ளலாம். அதற்குப் பல வருஷங்கள் முன்ன

தாகவே சவர்க்கார், கப்பல் துவாரத்தின் வழியாய்க் கடலிற் குதித்து, விலங்கை யொடித்து, கடலைக்கடந்து, துறைமுகச் சுவரேறி பிரான்ஸு தேசத்திற் பிரவேசித்தபொழுது, தன்னை-தன்னுடைய தேசத்தைக் கைப்பற்றியாளும் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு விரோதமாய்ப் புரட்சிசெய்த குற்றத்திற்காக—அது ஓர் அரசியல் குற்றமேயானாலும்—ஓர் இந்தியனை இந்த அரசாங்கம் கைதுசெய்தது நியாயமாகுமா, அல்லது ராஜநீதிதானாகுமா என்று கேட்டு, அதன் மூலமாய்ச் சர்வ தேசங்களின் கவனத்தை இந்தியாவின் மாட்டிழுக்க வில்லையா?"

ஸ்ரீ ஜெயகர் சொல்லுகிறார்: "சவர்க்காரை கௌரவிப்பது, வீரத்தையும் தியாகத்தையும் தேசபக்தியையும் கௌரவிப்பதாகும். இம்மூன்று அரும் பெருங் குணங்களும் அமைந்துள்ள மனிதர் அநேகரைக் காண்பதரிது. பூரண சுதந்திரம் வேண்டும் என்று நெஞ்சுக்குள் நினைப்பதற்கே முடியாத அந்தக்காலத்திலேயே, இப்பொழுது பலர் விரும்புகிற அதே பூரண சுதந்திரத்திற்காகச் சவர்க்கார் பாடுபட்டார் — பலியானார். கவுன்ஸிலுக்குள் புகுந்து, கவர்ன்மெண்டை யெதிர்ப்பது இப்போ தெவ்வளவோ எளிதாயிருக்கிறது. அப்போது அது அபாயகரமான காரியமாயிருந்தது. சவர்க்கார், சர்க்காரை அதன் தலைநகரிலேதானே தாக்கித் தனது சக்தித் திறமையைக் காண்பித்தார்."

மகரிஷி திலகர், மகா தியாகி லஜபதி, பிரசங்க நிபுணர் சுரேந்திரநாத வாணர், மாதுஸ்ரீ காமா, சாமாஜி கிருஷ்ண வர்மா, இப்பேர்ப்பட்ட படேபடே தேசாபிமானிகளெல்லாம்

விநாயக சவர்க்காரை விண்ணளாவியவரை புகழ்ந்து பேசி யிருக்கிறார்கள். இந்தியாவின் விரோதிகளான ஸர் வாலண் டைன் சிரோல், வின்ஸ்டன் சர்ச்சில், லாயிட் ஜார்ஜ் முதலிய இங்கிலீஷ்காரர்களும் சவர்க்காரை வியந்து புகழ்ந்திருக் கின்றனர்.

தேசியத் திருப்பணியில் சவர்க்கார் அடியெடுத்து வைத் தபோது, இந்திய தேசீய காங்கிரஸ் மஹாசபை, வெறும் மித வாதிகள் கூட்டமாயிருந்தது. அதிதீவிர வாதியான சவர்க் காருக்கும் அவர் சகோதரர்களுக்கும் சகாக்களுக்கும், காங்கிர ஸில் சேர்ந்து விண்ணப்ப பூர்வமாகவும், விநயபூர்வமாகவும் தலை வணங்கி அடிபணிந்து சுதந்திரங்கேட்க விருப்பமில்லை. சிநேகர் சங்கம் என்று பொருள்படும் **மித்திரமேளம்** என்னும் சபையை 1900-ம் ஆண்டிலும், யௌவன இந்திய சங்கம் என்று அர்த்தந் தரும், **அபிநவபாரதம்** என்னும் சங்கத்தை 1907-ம் ஆண்டிலும் ஆரம்பித்து அதனடியிலிருந்து வேலை செய்தார்கள்.

இவ்வாறு இன்றுவரை சவர்க்கார் காங்கிரஸ்காரரா யிருக் கவில்லை. காங்கிரஸ்காரர்களும் கொள்கை வித்தியாசத்தால் அவரை கௌரவிக்கவில்லை. "**வீடு கட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளிவிட்ட கல்லே அரண்மனைக்கு அஸ்திவாரக் கல்லா யிற்று**" என்று கிறிஸ்துபரமாத்மா கூறுவதுபோல், இன்று காங்கிரஸ்காரர்கள் விரும்பாது புறக்கணிக்கும் சவர்க்காரே, நாளை சுயராஜ்ய சர்க்காரை ஸ்தாபித்த சூரர்களில் ஒருவராய் கௌரவிக்கப்படுவார்; நிச்சயமாய்க் கௌரவிக்கப்படவே போகிறார். கொள்கைக்காக தியாகத்தை கௌரவிக்காதிருக்

கலாமா? மார்க்கம் மாறுபட்டதாயிருந்தாலும் சவர்க்காரின் எல்லையும், மஹாத்மாவின் எல்லையும் இரண்டல்ல - சுயராஜ்யம் என்னும் ஒன்றேயன்றோ? இதை எவரே மறுப்பர்!

---

## 2—ஓர் வீரப் பிறவி.

"காலனு மஞ்சக் கலக்கு மராட்டர்"—என்று கவியரசன் பாரதியார் பாடியிருக்கிறார். மராட்டியர் மல்லாண்மையிற் பேர்போனவர்கள். மகாராஷ்டிரர் என்கிற வார்த்தைக்கு மகா தேசத்தார் என்று அர்த்தம். க்ஷத்திரபதிகளான சிவாஜியும், க்ஷத்திர சாலனும் அந்த ஜாதியில் க்ஷத்திரிய மரபில் உதித்தவர்கள். இந்த இதிகாச நாயகன் பிராம்மண குலத்திற் பிறந்தவன்.

பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்னும் நான்கு வருணங்கள் இந்தியாவில் வெகு காலமாய் இருந்து வருகின்றன. இவ்வருணபேதம் இப்பொழுது அவஸ்யந்தானா என்பது பிரச்னை பரம்பரையி லிருக்கிறது.

பூர்வகாலத்தில் இந்தியர்கள் போர்க்குணம் படைத்தவர்களா யிருந்தார்கள். உள் நாட்டிலும் வெளி நாட்டிலும் அவர்கள் எதிரிகளோடு யுத்தஞ் செய்யவேண்டியவர்களா யிருந்தனர். வருஷம் முந்நூற்றறுபது நாளும், அவர்கள் ரண களத்திலேயே நிற்கவேண்டியவர்களா யிருந்தார்கள். சாமி காரியமும், சாப்பாட்டுக் காரியமும் நடக்கவேண்டுமே? அதற்காக அவர்கள் அருமையான உபாயஞ் செய்தார்கள். பக்தி

மான்களாகவும், படிப்பாளிகளாகவும், ஒழுக்க சீலராகவும் ஒரு சிலரைப் பொறுக்கியெடுத்து, ஆலய அர்ச்சனை, வேத பாராயணம் முதலிய தேவதாகாரியங்களைச் செய்யச்செய்தனர். அவர்கள் நாளடைவிற் பிரிந்து பிராமணர்கள் என்று ஒரு தனிச் சாதியாகிவிட்டனர். பிராமணன் மகன் பிராமணன் என்பது பிற்கால வழக்கம். முற்காலத்தில் எவ்வருணத்தைச் சார்ந்தவனாயினும், கல்விமானாகவும், அறிவாளியாகவும், வைதிகனாகவு மிருந்தால் அவன் பிராமணனாகப் பாவிக்கப் பட்டான்.

சரீர திடமும், மனத் துணிவு முள்ளவர்களெல்லாம் படைக்கலப் பயிற்சி பெற்றுச் சேனையிற் சேர்ந்து போர் புரிந்தனர்; அல்லது போருக்குத் தயாராயிருந்தனர். அவர்கள் சக்தியுடையவர்கள்—க்ஷத்திரியர்கள்.

அப்புறம் வர்த்தக வகுப்பு வகுக்கப்பட்டது; அவர்கள் வைசியர்கள். உள்நாட்டு உற்பத்தி அல்லது விளை பொருளை, வெளிநாடுகளில் விற்று, உள்நாட்டுக்குத் தேவையான பொருள்களை வெளிநாடுகளிலிருந்து வாங்கி வந்து, உள்நாட்டில் விநியோகிப்பது அவர்கள் வேலை. இலாபத்துக்காகவல்ல, தேசத்தின் தேவைக்காக அவர்கள் இந்த வேலையை—அல்ல சேவையைச் செய்துவந்தனர்.

நான்காவது ஜாதி சூத்திரர்—மனித சமூகமாகிற இயந்திரத்தை இயக்குகிற சூத்திரம் போன்றவர். அவர்களில்லாவிட்டால் உலகத்தில் ஒன்றும் நடவாது. உணவுப் பொருளை உற்பத்தி செய்கிறவர்களான சூத்திரர் அல்லது சமுசாரி அல்லது விவசாயிகள்தான் அன்ன தாதாக்கள்—உயர்ந்த ஜாதியார்.

இவர்களில் பிராமணர்கள், போருக்குப் போயிருக்கிற க்ஷத்திரியர்களுக்கு வெற்றியையும், வியாபாரத்துக்குத் தூர தேசம் போயிருக்கிற வைசியர்களுக்கு சௌக்கியத்தையும், மண்ணைப் பிளந்து, விதை விதைத்துக், களை களைந்து, ஒரு தான்யத்திலிருந்து பல நூறு தான்யமணிகளைச் சிருஷ்டிக்கிற சூத்திரர்களுக்குக் காலமழையையும், கால் கைச் சுகத்தையும் அளிக்கும்படி பகவானைப் பூஜிப்பார்கள். புல் (தருப்பை) தாங்கிப் பூஜை புரியும் பூசாரிகளில், வில் தாங்கிப் போர்புரியும் வீரர்களும் இருந்தனர். இராம சரிதையில் வருகிற பர்சுராமனும், பாரதத்தில் வருகிற விற்குரு துரோணனும், அவன் மகன் அசுவத்தாமனும், கிருபாச்சாரியும், சேனாதிபதிகளாயிருந்து பாரதயுத்தத்தை நடத்தவில்லையா?

பிற்காலத்தில் வர்ணாச்சிரம தர்மத்தை மறந்து, வெறும் சம்பிரதாயங்களுக்கும், வீண் சடங்குகளுக்கும் மனிதர் அடிமையாகி, ஜாதியில் உயர்வு தாழ்வு என்று ஒருவிதமாய் ஒருவர்க்கொருவர் வேலி போட்டுக்கொண்டு மந்தை மந்தையாய்ப் பிரிந்து, நாலு ஜாதியை நாலாயிரம் ஜாதிகளாக்கி விட்டனர். பிராமணீயம் போனவிடம் தெரியவில்லை; க்ஷாத்திரம் தீர்க்கும் க்ஷத்திரியத்தன்மையும், பகைவெல்லும் போர்த்திறமையும் இந்தியாவில் அருகிவிட்டது. தேசத்தின் தேவைக்கும், க்ஷேமத்துக்கும் வர்த்தகம் நடத்தியது போய், வயிற்றுக்கும் வாழ்வுக்கும் விற்றுப் பிழைப்பதென்கிற நிலைமைக்கு வைசியர்கள் வந்துவிட்டார்கள். விவசாயம் சமுசாரிகளை வறுமையில் வீழ்த்திவிட்டது. இவைகள்தான் நாடு அடிமையானதற்குக் காரணங்கள்.

நாலுகுல நன்மைகள் நஷ்டமானதில், வீர குலம் விரைய மானதுதான் இந்தியாவுக்குப் பெரிய இழப்பு. இதை ஈடு செய்ய எவரும் எண்ணவில்லை. மகாராஷ்டிர மன்னன் சிவாஜி யின் மனதிலேதான், புதிய வீர குலத்தைச் சிருஷ்டிக்க வேண்டும் என்கிற எண்ணம் முதலில் உண்டாயிற்று. அதற் காக அவன் ஜாதிபேதம் பார்க்கவில்லை; க்ஷத்திரியர்கள் எங் கிருக்கிறார்களென்று தேடித் திரியவுமில்லை. தைரியசாலிக ளாகவும், திடசாலிகளாகவுமிருந்த எல்லோரையும் சைன்யத் திற் சேர்த்துச் சண்டையிற் பழக்கினான்.

1871-ம் ஆண்டில் ஜப்பானில், ஸாமுராய் ஜாதி அழிக்கப்பட்டு எல்லா ஜப்பானியரும் சைன்யத்திற் சேரலாம் என்று சட்டம் செய்ததினாலேதான் இன்றைக்கு ஜப்பான் இவ்வளவு பிரபலம் பெற்றிருக்கிறது. அதேபோற் சிவாஜி செய்தபோது பிராமணர்களும் போர்வீரர்களாயினர். **சித்த பவனர்** என்னும் ஜாதிப்பிராமணர்கள் அதில் தீவிரமாய் இறங்கினார்கள்.

சித்தபவனஜாதி, இந்தியா முழுவதிலும் தேர்ந்தெடுக் கப்பட்ட சிறந்த ஜாதியாகிவிட்டது. சென்ற இரண்டுநூறு வருஷங்களாகத் தொடர்ச்சியாய்ப் பல வீரர்களையும் தியாகிகளையும் அந்த ஜாதி தாங்கி வருகிறது. சிவாஜி சுவர்க்கவாசியானபின், சாம்பாஜி சாயுச்ய மடைந்ததும், மராட்டிய சாம்ராஜ்யம் மங்கிவிடும் என்றிருந்தபோது அதன் மகிமையைப்பிடித்து நிறுத்திய **பாலாஜி விஸ்வநாதன்** தோன் றியதும் சித்தபவனஜாதி! இந்தியாவில் இதுவரை உதித்த எல்லாச் சேனாதிபதிகளிலும் முதன்மையானவன், என்று

பேரெடுத்த **பாஜீராவ்** பிறந்ததும் சித்தபவனஜாதி! இந்தியாவை அடிமை அந்தகாரத்தில் அமிழ்த்திய **பானிபட்** யுத்தத்திற் பிரசித்திபெற்ற வீரனாய் விளங்கிய அசகாயசூரன் அவதரித்ததும் சித்தபவனஜாதி! இணையில்லா இராஜதந்திர நிபுணனான **நானுபதுமநிவாசன்** தோன்றியதும் சித்தபவனஜாதி! 1857-ல் இந்தியாவில்நடந்த, முதல் சுதந்திர மஹாயுத்தத்தை, ஆங்கிலச் சரித்திராசிரியர்கள் சிப்பாய்க் கலகம் என்று எழுதிவைத்திருக்கிறார்கள். அதில் **நானுசாஹிப்** அதி ஆக்ரோஷத்தோடு போர்புரிந்தான். அவன் பேரைக் கேட்ட ஆங்கிலச் சிப்பாய்கள் சிம்மசொர்ப்பனங் கண்டது போல் திடுக்குற்றனர். அவனைச் சிறைசெய்ய, அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சி இவ்வள வவ்வளவல்ல. இனிமேல் முடியாதென்றேற்பட்டபோது இமயமலைக் காடுகளுக்குள்ளே நானு ஓடிப்போனான். இன்னும் அங்கேயே அவன் வீரவேள்வி செய்கிறானென்று சொல்லப்படுகிறது. அப்பேர்ப்பட்ட தியாக புருஷன் ஜெனித்ததும் சித்தபவனஜாதி! மிதவாதிகளில் மீசுரமானவரும் சிறந்த தேசாபிமானியுமான **கோபால கிருஷ்ண கோகுலர்** பிறந்ததும் சித்தபவன ஜாதி! **சுயராஜ்யம்** என்னும் சொல்லை ஸ்வச்சமாய் உச்சரித்து, அது **என் பிறப்புரிமை, அதை நான் அடைந்தே தீருவேன்** என்று கர்ஜித்த **லோகமான்ய பாலகங்காதர திலகர்** தோன்றியதும் சித்தபவன ஜாதி! மனுமுறை கண்ட சோழ மஹாராஜனைப்போல், நீதி வழுவாது நியாயம் புரிந்த நீதிபதி **ரணதேவர் (Ranade)** ஜெனித்ததும் சித்தபவன ஜாதி! இந்திய சுதந்திரத்துக்காக பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு விரோதமாய்ப் புரட்சி செய்த **வசுதேவ பலவந்தன்** பிறந்ததும் சித்தபவன ஜாதி! **புனவில்,**

பிளேக் உத்தியோகஸ்தர்களா யிருந்த பிரிட்டிஷ் அதிகாரி களைக் கொலை செய்ததாய்க் குற்றம் சாட்டப்பட்டுத் தூக்கி விடப்பட்ட வீரத் தியாகிகளான சபேகர் சகோதரர்களும், ரணதேவும் தோன்றியதும் சித்தபவன ஜாதிதான்!

சித்தபவன ஜாதி சிறந்த ஜாதி! வங்காளத்தி லிருக்கிற வசு வம்சமும் அதற்கு ஈடாகாது. உலக முழுதிலும் அதற்கு உவமையான ஒரு ஜாதி கிடைப்பதரிது. வீரத்துக்கு வித்தாக வும், தியாகத்துக்கு வரம்பாகவும் சித்த பவனம் திகழ்கிறது. வீரர் விளை நிலம் என்று, அந்த ஜாதியை வாலண்டைன் சிரோல் வர்ணிப்பது, எவ்வளவு பொருத்தமா யிருக்கிறது! அவ்வம்ச வல்லியிலேதான் சவர்க்கார் சகோதரர்களும் ஜனித் தார்கள்.

1883-ம் ஆண்டில், பம்பாய் மாகாணத்தில் நாஸிகை (Nasik) நகரை யடுத்த பாகூர்க் கிராமத்தில், விநாயக தாமோதர சவர்க்கார் ஜெனனமானார். அந்த ஆண்டை, இந்தியாவின் அதிர்ஷ்ட ஆண்டென்று சொல்லவேண்டும். சவர்க்கார் ஜெனித்ததால் மாத்திரமல்ல; மற்றுமொரு காரணத் தாலும் அவ்வருஷம் அவ்வளவு மகத்துவம் பெறுகிறது. அதாவது இந்தியாவுக்குச் சுயராஜ்யங் கொடுக்கக்கூடியதாக வும், இந்தியர்களுக்குக் கதிமோட்ச மளிக்கக்கூடியதாகவும், இந்தியாவிலிருக்கிற எல்லா மதத்தினருக்கும், எல்லா மரபின ருக்கும், எல்லா மொழியினருக்கும் பிரதிநிதித்துவம் வகிக் கக்கூடியதாகவு மிருக்கிற இந்திய தேசிய காங்கிரஸ் மஹா சபை ஆரம்பிக்கப்படுவதற்குப் பூர்வாங்கமாய் பம்பாய், கல்கத்தா, சென்னை முதலிய நகரங்களிற் பல சபைகள் ஸ்தாபிக்கப்பட்டதும் அந்த அமர வருஷத்திலேதான்.

விநாயகரின் தந்தையான தாமோதர பந்தனுக்கு மூன்று பிள்ளைகளும் ஒரு பெண்ணும் இருந்தனர். மூத்த பிள்ளை கணேச பந்தன்; அடுத்தவன் விநாயக தாமோதரன்; கடைக் குட்டி பலவந்த நாராயணன். இம் மூவருந்தான் பிரக்யாதி பெற்ற சவர்க்கார் சகோதரர்கள்.

---

## 3—பால லீலைகள்.

விநாயக சவர்க்கார், வளரும்போதே வினயவானுகவும் வித்வானுகவும் வீரவானுகவும் வளர்ந்தான். சிவாஜியின் திறம், மாஜினியின் தேச பக்தி, நெப்போலியன் துணிவு, கரிபால்டியின் போர்த் திறமை இவைகளெல்லாம் விநாயகனிடம் புதிய புனர்ஜென்மம் எடுத்திருந்தன.

தாமோதர பந்தன் நல்ல தந்தை; சிறந்த கல்விமான்; நிறைந்த மேதாவி. குழந்தை வளர்ப்பில் அவரைப்போல் ஒரு அப்பாவைக் காண்ப தரிது. ஹிதமாகப் பேசவேண்டிய இடத்தில் ஹிதமாகப் பேசியும், கண்டிக்கவேண்டிய இடத்திற் கண்டித்தும், தண்டிக்கவேண்டிய இடத்தில் தண்டித்தும் தனது பிள்ளைகளைத், தாமோதர பந்தன், உலகப்பிரவிர்த்தியில் மனிதத்தன்மையோடு இறக்கிவிட்டார்.

இராமாயணம் மகாபாரதம் முதலிய இதிகாசங்களையும், ராணுப் பிரதாப சிம்மன், க்ஷத்திரபதி சிவாஜி, மகாவீரன் பாவு முதலிய வீரத்தியாகிகளின் வீர வாழ்க்கைகளைக் குறிப்பதான சரித்திரங்களையும், தன் குமாரர்களுக்குத் தாமோதர பந்தன், கதா ரூபமாகவும் கவிதா ரூபமாகவும் போதித்து

வந்தார். ஹோமருடைய காவியங்களையும், போப்பின் இலியாதையையும், அகமமனன், அச்சியலியன் முதலியவர்களின் அகாத சூரத்துவத்தைச் சொல்லுவதான கதைகளையும், தந்தையின் காலடியிலிருந்து அவர்கள் கவனமாய்க் கேட்டார்கள்.

சுதாவிலேயே, தாமோதர பந்தன் ஒரு கவிஞன். தனது பிள்ளைகளையும் கவிஞர்களாக்கவேண்டுமென்கிற கவலை அவருக்கு நிறைய உண்டு. வாமணன், மோரா பந்தன், துக்காராம் முதலிய மராத்திக் கவிஞர்களின் பாக்களை மனப்பாடஞ் செய்யும்படி புத்திரர்களுக்குப் போதித்தார். பிதாவின் போதனை விநாயகனை வித்வானுக்கிவிட்டது. பத்து வயதிலேயே பாக்களியற்றும் பழக்கம் பால விநாயகனுக்கு வந்தது.

ஐந்து வயது அறியாப் பிராயத்தில்—குடித்த பால் குமட்டிலிருந்த குழந்தைப் பருவத்திற் குமரகுருபரன் கலிவெண்பாப் பாடினன். ஞானசம்பந்தனும் மூவாண்டுக் குழந்தைப் பிராயத்திலேதான் தோடுடைய செவியன் என்று பாடத் தொடங்கினன், சுப்பிரமண்ய பாரதி ஏழாவது வயதில் இன்பப் பாடல்கள் எழுத ஆரம்பித்தான். பிறவிப் புலவர்களுக்குச், சிலந்திப் பூச்சி நுனிநாக்கில், நூல் தெறித்து விழுவதுபோல், மதுரவாணியாகிற மலர்க் கவிகள், சுயமாகவே உதிர்கின்றன. படிப்பினல் பாவன்மை வராது. பிறப்பிலேயே கவிதா சக்தி பொருந்தியிருக்கவேண்டும்.

விநாயக சவர்க்கார், தேசபக்த சமாஜத்தில் தலைமை ஸ்தானம் வகிக்கும்படியான சந்தர்ப்பம் ஏற்பட்டதற்குக் காரணமும், பிறவியிலேயே அவன் வித்வானுகவும் வீரவானுகவும் இருந்ததுதான். சாதாரணக் குழந்தைகள் சகடிழுத்து

விளையாடியபோது, விநாயக சவர்க்கார் சரஸ்வதியைச் சரணடைந்து சம்பன்ன ஞானன். மராத்தி பாஷையில், அதி பால்யத்தில் அவனியற்றிய செய்யுட்களை, புனா நகரப் பத்திரிகைகள் பிரத்தியேகமான இடத்திற் பிரசுரித்தன. பத்தூ வயதுப் பாலகனுடைய பாக்கள், பத்திரிகைகளின் பத்தியில் இடம்பெறுமானால், அவைகள் எவ்வளவு மேன்மை யுடையனவா யிருந்திருக்கவேண்டும்!

“ஆண்டோர் பத்தினில் ஆடியும் ஓடியும்
ஆறு குட்டையில் நீச்சினும் பேச்சினும்
ஈண்டு பன்மரத் தேறி யிறங்கியும்
என்னொ டொத்த சிறுவ் ரிருப்பால்
வேண்டு தந்தை விதிப்பினுக் கஞ்சியான்
வீதியாட்டங்க ளேதினுங் கூடிலேன்
தூண்டு நூற்கணத் தோடு தனியனாய்த்
தோழமைப் பிறிதின்றி வருந்தினேன்”—

என்று பாரதியார், தனது கனவுக் கவிதையிற் கூறுகிறவாறு, விநாயகன் எந்தநேரமும் ஏடுங் கையுமாயிருந்து ஏற்றமடைந்தான். **பால கவி** என்று பாலர்கள் அவனுக்குப் பட்டமளித்தனர்.

வீட்டின் ஒதுக்குப் புறமான ஒரு மூலையில், ஒரு பெரிய புத்தகப் பெட்டி யிருந்தது. அதில் தாமோதர பந்தன் படித்து முடித்த புத்தகங்களையும் பழைய பத்திரிகைகளையும் பராமுகமாய்ப் போட்டிருந்தார். வேறுபிள்ளையானால் அவற்றைக் கிழித்துப் படகோ பட்டமோ செய்து விளையாடும். விநாயகன் வினயமானவன். ஒவ்வொன்றாய் எடுத்துப் படித்

தான். திலகரின் கேசரியும், * சிபலங்கரின் நிபந்தமாலையும், மராத்தியர்கள் மஹா பிரபலர்களாய் ராஜ்யம் ஆண்ட காலத்தில், அவர்களுடைய பிரதாபங்களைக் குறிப்பதான ஒன்றிரண்டு அம்மானைகளும் அப்பெட்டியி லிருந்தன. "செவிக்குணவில்லாத போழ்து சிறிது, வயிற்றுக்கும் ஈயப்படும்" என்ற வள்ளுவன்போல, விநாயகன் வயிறு மறந்தாலும் வாய் மறவாமல் அவற்றைப் படித்துப் பயனடைந்தான். புத்தகத்தைத் துளைக்கும் ராமபாணப் பூச்சியைப்போல், அவன் எந்த நேரமும் புத்தகக் குப்பையிற் புதைந்துகிடந்தான். பள்ளித் தோழர்களையும் விளையாட்டுச் சிறுவர்களையும் அடிக்கடி அழைத்துவந்து, தனது ஐஸ்வரியமான அப்புத்தகங்களை அவர்களுக்குக் காண்பித்தும், அவற்றிலுள்ள அரிய விஷயங்களைக் கற்பித்தும் வந்தான்.

மனிதர்களை வனைகிறதான மனைக்கல்வியோடு பள்ளிக் கல்வியும் விநாயகன் பயின்றான். பாகூர், சிறு கிராமம். உயர்தரக் கல்லூரியோ கலாசாலையோ கிடையாது—சின்னத் திண்ணைப் பள்ளிக்கூடம் ஒன்றிருந்தது. அதிற் சேர்ந்து படித்தான். பள்ளிக்கூடம்விட்டு வீட்டுக்கு வந்தால், வேறு பிள்ளைகள்போல், விநாயகன், பம்பரமும் பந்தும் கையுமாய் வீதியாட்டங்கள் ஆடுவதில்லை. பூர்வகாலத்து க்ஷத்திரியப் பிள்ளைகள், உண்டைவில்லும், மரவாளும் வைத்து, விற்போர் வாட்போர் செய்து விளையாடுவதுபோல், சகாக்களைச் சரி பாதியாய்ப் பிரித்துக் கன்னிப் (இளம்) போர் புரிந்து காலங் கழித்தான்.

---

* தமிழில் சுப்ரமண்ய பாரதியாரைப்போல், மராத்தியில், சிபலங்கர், சிரேஷ்டமான தேசிய கவிஞரா யிருந்தார்.

இவ்வளவில் இஸ்லாமியரால், இணக்க மின்மையாகிற பிணக்கு இந்தியாவி லேற்பட்டது. மதவெறியால் மனிதர்கள் மதர்த்து, ஒருவரையொருவர் மாய்க்கத் தொடங்கினர்கள். 1893-முதல் 95-ம் ஆண்டு வரை இந்த அக்கிரமம் நடந்தது. மதவாதம், நரவதத்திலும் நாசகாரியத்திலும் முடிந்தது. இரண்டு மூன்று வருஷங்கள், இந்து முஸ்லீம் கலகங்கள் இப்படி நீடித்திருக்க, இந்திய அரசாங்கம் என்ன செய்துகொண்டிருந்தது? விக்டோரியா மகாராணி தந்த சாசனத்தின் ஷரத்துக்களை எப்படியெப்படி நிறைவேற்றினுலும், மத விஷயங்களில் தலையிடுவதில்லையென்றும், கண்டிப்பான நடுநிலை வகிப்பதென்றும் இருக்கிற, மத சமரஸப் பிரிவை மாத்திரம், பிரிட்டிஷ் அரசாங்கம் எழுத்தெழுத்தாய்ப் பின்பற்றிற்று—இப்பொழுதும் அப்படித்தான் செய்கிறது.

அரசாங்க மிருக்கட்டும். மனிதர்களாவது மனிதத்துவத்தை யிழக்காம லிருக்கப்படாதா? மனிதர்களைச் சன்மார்க்கத்தில் நடத்துவதற்காகத்தானே மதச் சடங்குகளும்—மதக்கோட்பாடுகளும் வகுக்கப்பட் டிருக்கின்றன? அவற்றைப் பின்பற்றுகிறவர்கள், வெறும் சம்பிரதாயங்களுக்கும் வீண் சடங்குகளுக்கும் அடிமையாகலாமா? வாளை விட்டுவிட்டு, உறையை யெடுத்துக்கொண்டு யுத்தத்துக்குப் போன சிப்பாயியைப்போலும், சத்தை விடுத்துச் சக்கையைத் தின்னும் புழுவைப்போலும், மதத்தின் சத்தும் சித்துமான தத்துவத்தை மறந்து, வீண் வியவகாரங்களுக்காக மனிதர் ஒருவரையொருவர் பகைக்கலாமா? **மதம் போதைப் பொருள்—அபினுக்குச் சமமானது** என்று **மகரிஷி மார்க்ஸ் (Karl Marx)** சொன்னதில் என்ன பழுதிருக்கிறது?

குடிவெறி கொண்டவனைப்போல் மதவெறி கொண்டவனும், குரோதத்தாலும் விரோதத்தாலும், நல்லது கெட்டது என்று அறியும் பகுத்தறிவையும், நியாயம் அநியாயம் என்று நிர்ணயிக்கும் மனிதத்துவத்தையும், புறங்காலால் உதைத்துவிட்டுச் சைத்தான் சமாஜத்திற் சேர்ந்து பீதி நிறைந்த பேய்ச் செயல்கள் செய்யத் தொடங்குகிறான். குளிக்கப் போனவன் சேற்றைப் பூசிக்கொண்டதுபோல், மதபோதங்களைப் பின்பற்றி மோக்ஷத்துக்குப் போகவேண்டுமென்று விரும்பியவன், மதவெறிபிடித்து நரகத்தில் நழுவிவிழுகிறான். ஆசாரங்களென்று சொல்லப்படுபவைகள், எல்லாக் காலங்களிலும் ஒரே மாதிரியா யிருக்கவேண்டுமென்று எண்ணுவது எவ்வளவு மதியீனம்! மனிதனுடைய பழக்க வழக்கங்கள் காலத்தால் மாறுவதுபோல், மதாச்சாரங்களும் மாறவேண்டியவைகள்தானே? நியமங்கள், நித்திய யௌவனத்தோ டிருக்கவேண்டுமென்று நினைப்பது நியாயமல்ல.

மதங்களைச் சிருஷ்டித்தவர்கள் அவதாரர்களே யானாலும் அவர்களும் மனிதர்களே யன்றோ! அவர்கள், அவர்களிருந்த காலத்துக்கேற்றவாறு ஆசாரங்களை யமைத்தார்கள். அந்தக் காலம் இப்பொழு திருக்கிறதா? உதாரணம் ஒன்று சொல்கிறோம். முந்தைய வேதரிஷிகள் மதுவுண்டார்கள். மதுவுண்ணல், அக்காலத்தில் மதிக்கவும் அனுமதிக்கவும்பட்டது. க்காலத்திலோ? மதுவுண்டவர்களைக் குடிகாரர்களென்று குறைக்கிறோம்; கடையர்களென்று கழிக்கிறோம்; மடையர்களென்று மறுக்கிறோம். காதல், கவருடல், கள்ளுண்டல், பொய்மொழிதல், ஈதல்மறுத்தல் என்றுசொல்லப்படும் பஞ்சமா

பாதகங்களிலே, மதுவுண்ணல் மத்தியில் வைக்கப்பட்டிருக்கிறது. ஏன்? பாவங்களுக்கு அது நடுமையம்.

இரண்டு வருஷங்கள், இந்தியாவெங்கும் இவ் வகுப்பு வாத வெறி, இராக்ஷஸ வேகத்திற் பரவிற்று—மகாராஷ்டிரத்திலும் மூண்டது. இந்துக்களின் ஆலயங்கள் அர்த்தநாசமாயின; அரிய பெரிய பொருள்களும் அலங்கோலமாயின. முஸல்மான்களின் மசூதிகளும், மற்றும் உடைமைகளும் அப்படியே.

விநாயகனுக்கு அப்போது வயது பத்து. பாலகனையும் அப் பரிதாபகரமான பைத்தியம் விடவில்லை. மதவெறி மண்டை முட்டியது. மானம் மனிதனைச் சேர்ந்த பதார்த்தம்; அதை யிழப்பது இழுக்கு. வீரர்கள் எதை யிழந்தாலும் மானத்தைமாத்திரம் இழக்கமாட்டார்கள். பிராணனைப் பெரிதாய்ப் பார்க்காமல் மானத்தை மதிக்கிறவர்கள்தான் வீரர்கள். விநாயகன் வீரன்; சுத்த வீரன்; சுத்த சன்மார்க்க வீரன். மதத்துக்கு நேர்ந்த அவமானத்தை அவனால் எப்படிச் சகிக்க முடியும்? உள்ளங் துடித்தது; உதிரங் கொதித்தது; பழிவாங்கப் பதைபதைத்தான். ஒருவன்—அதிலும் சிறுவன்—அவனால், அகில இந்தியாவிலும் ஏற்பட்டிருக்கிற அக்கிரமத்துக்கு எப்படிப் பழிவாங்க முடியும்? மாணவரும் தோழருமான சில சிறுவர்களைச் சேர்த்து ஒரு மந்திராலோசனை சபை பண்ணினான். பாகூர்க் கிராமத்துப் பள்ளிவாசலை முற்றுகையிடுவது என்று தீர்மானிக்கப்பட்டது.

சபையில் கண்டிப்பான கட்டுப்பாடு மிருந்தது. பன்னிரண்டு பேரில் ஒருவனுடைய வாய் கொஞ்சம் ஓட்டை—

உள்ளதை எப்படியோ உழறிவிட்டான். உதட்டை முட்டியது ஊரை முட்டுமல்லவா? மறுவாரம் முஸ்லீம் பால்யர்கள் பன்னிருவர், விநாயகனையும் அவனுடைய சைனியத்தையும் போருக்கழைத்தனர். பாகூர்ப் பள்ளிக்கூடத்துத் தாழ்வாரத்திற் கடுமையான கன்னிப் போர் நடந்தது. விஸ்தாரமான அறிவுடைய விநாயகன், தனது சேனைக்குக் குண்டுசி, நூல் கழி, பேனுக்கத்தி முதலியவைகளை ஆயுதமா யளித்திருந்தான். முஸ்லீம் மாணவர்கள் முன்யோசனையின்றி வெறுங்கையர்களாய் வந்திருந்தனர். இதனுல் இவர்கள் தோற்கடிக்கப்பட்டனர்; விரட்டியடிக்கப்பட்டனர். அப்புறம் ஆசிரியர்கள் வந்து பகை திர்த்துச் சமாதானஞ் செய்தார்கள்.

முஸ்லீம் மாணவர்களில் ஓர் அராபியச்சிறுவன்-ஏழைக் குறும்புங் கோழைத்தனமுங் கொண்டவன். அவனுக்கு விநாயகனிடம் விரோதமுங் குரோதமும் நீங்கவில்லை. அவன், விநாயகன் வாயில் அக்கிரமமாய்ப் பொறித்த மீனைத் திணித்துப் பிராமணியத்தைக் கெடுத்து, இஸ்லாத்திற் சேர்த்துவிடுவதென்று சூழ்ச்சி செய்தான். அட அநியாயமே! மதத்தின் பெயரால் மனிதன் இவ்வளவு பெரிய தீமையைச் செய்ய வேண்டும்!

பிடிவாதமான பிரசாரத்தின்மூலம், மதம் மாற்றுவதை ஒரு புனிதமான காரியமாகச் சிலர் கருதுகிருர்கள். மதம் நல்லதோ கெட்டதோ, மதம் மனிதருக்கு அவசியமோ அல்லவோ, அது அவனவன் இஷ்டத்தைச் சேர்ந்ததாகவும், அவனவன் சொந்தச் சுதந்திரமாகவும் இருக்கவேண்டும். சுய மதத்தின் நன்மைகளை மாத்திரம் பிரித்துக் கூறியும், அயல்

மதத்தின் திமைகளை மாத்திரம் எடுத்துக் காட்டியும், மனிதனின் தற்போதத்தை யிழக்கச்செய்து, பிறபோதத்தால் மத மாற்றுவதைப் பெரியோர் அனுமதியார். இந்து மதம் இது வரை இந்தத் திமையைச் செய்யவில்லை. இஸ்லாம் மதமும் கிறிஸ்துவ மதமும் இதில் போட்டிபோட்டுக்கொண்டு வேலை செய்கின்றன. அவைகள் நல்ல மதங்களா யிருக்கலாம். நல்லதைச் சொல்லிக் காட்டுவதைவிடச், செய்து காட்டிப் பிறரைப் பின்பற்றச் செய்வது மேல். அதை யாரும் ஆக்ஷேபிக்க மாட்டார்.

அராபியச் சிறுவன் அவன் சூழ்ச்சியை மறந்துவிட்டான். பகை முடிந்தது; போரும் முடிந்தது. விநாயகன் படைத் தலைமை விடவில்லை. முன் நடந்த போரின்போது, தன் சைன்யத்தைச் சேர்ந்த சிறுவர் சிலர், ஜாடையாய் நழுவி விட்டதையும், அவர்களின் பெற்றோர் அழைத்த சாக்கில் அகன்றுவிட்டதையும் விநாயகன் வினயமாய் நினைத்துக் கொண்டிருந்தான். இது, பின்னர் சேனை சேகரிப்பதற்கும், சேனையில் கண்டிப்பான நிபந்தனைகள் நியமிப்பதற்கும் அதிக உபயோகமா யிருந்தது. ஒழுங்கும் கட்டுப்பாடு மில்லாத ஒரு சைன்யம், உற்ற தருணத்தில் உபயோகப்படாது என்பதை, அவ்வளவு இளம் பிராயத்திலேயே அவன் அறிந்திருந்தான். வீண் விளையாட்டில் விலையுயர்ந்த நேரத்தை வீருதாவாய்க் கழிக்காமல், பிற்காலத்திற் பிரயோசனப்படக்கூடிய படைப் பயிற்சியில் பாலர்களைப் பழக்க அவன் ஏற்பாடு செய்தான்.

விநாயகன் தந்தை தாமோதரபந்தன், சிறந்த தெய்வபக்த ரென்று சொன்னேமல்லவா ? அவர், தமது வீட்டில் துர்க்கா தேவியின் வெண்கல விக்கிரக மொன்று வைத்திருந்தார். அதற்கு அனுதினமும் பூஜை புனஸ்காரங்கள் புரிவதுண்டு. சம்பாதனைக்காகத் தந்தை வெளியிற்சென்ற தினங்களில் அவருக்குப் பதிலாக விநாயகன் பூஜைபுரிதல் வழக்கம். காளி மாதாவின் காலடியில் அவன் வீற்றிருந்து, பக்தனுக்குரிய பரிவோடும் பாசத்தோடும் பண்ணுகிற பூசனையைப் பார்த் தால், துருவனுடைய பாவனையும் வாசனையும் பரிமளிக்கிறது:-

"சிவாஜிக்கு வீரப்பாலூட்டி வெற்றிதந்த தாயே! அடியே னுக்கும் அருள்பாலிக்கவேண்டும்! தேசம் க்ஷேமமடைய வும்! தர்மம் தழைக்கவும் தயைபுரியவேண்டும்! உனது பக்திக்கும் பரிவுக்கும் பாத்திரர்களாகிய உன் மக்கள், சரீரத் தால் பிறர்க்கு அடிமைகளா யிருந்தால் உன்னை எப்படி ஒருமையோடு பூஜிக்கமுடியும்? அரசிய லடிமைகள் ஆத்ம விடுதலை அடைவதெங்ஙனம்? தயைபுரிந்து எங்கள் நெஞ் சுக்கு நீதியும், நேர்மைக்கு வாளும் அருளுவாய்!" என்று பிரார்த்திப்பான்.

அப்போது அவன் பரவசமான பக்திப்பெருக்கினல் உள்ளமுருகி, ஊற்றிருந்தொழுகுங் கண்களோடு உலகத்தை மறந்தவனுய் உட்கார்ந்து விடுவான். அந்த லயத்திலிருந்து அவனைக் கலைக்கத் தந்தையோ, தமயனே, தம்பியோ வர வேண்டும். அவ்வளவு பக்தி! நவராத்திரிக் காலங்களிற் பாடப்படுகிற சப்த சதியும், மற்றும் துர்க்கா ஸ்தோத்திரங் களும் விநாயகனுக்கு வெகு உற்சாகத்தையும் உணர்வையு

மளித்தன. ஸ்வயம் தானுகவே அந்த அம்மையின்மீது ஒரு சதகம் (நூறு பாக்கள்) பாடியுள்ளான். அதன் சொற்சுவை யும், பொருட்சுவையும், பாவலரும் பாராயணம் பண்ணும் படியான இலக்கண இலக்கிய அலங்கார ருசி கலந்திருந்தன!

விநாயகன் பத்துவயதுப் பாலகனு யிருந்த போதே தாயைத் தின்றுவிட்டான். சவர்க்கார் சகோதரர்கள் மூவரும் சகோதரியும் தாயற்ற சேய்களாயினர். இனித் தந்தையின் தயாளப் பராமரிப்பிலேதான் அவர்கள் வளர்ந்து வாலிபர் களாகவேண்டும். தாமோதரபந்தன் நல்ல தந்தை. மறுதாரம் மணமுடித்து, மக்களுக்கு மாற்ருந்தாயின் துயரத்தை யளித் துத் தாமுந் துக்கப்பட அவர் மறுத்துவிட்டார். சமையல்முதற் சகல வேலைகளையும் தாமே செய்து, தமது குழந்தைகளைத் தாயினுந் தயவோடு வளர்த்தார்.

ஸ்தூல மாதாவைப் பிரிந்த விநாயகன், லோகமாதாவைச் சரணடைந்தான். அவளிடத்திலே தனக்கு வேண்டியவை களை விண்ணப்பித்துக் கொள்வதும், தனது குற்றங் குறை களைக் கூறிக்கொள்வதுமாக விநாயகன் விசாரத்திரந்து விபுல னுனன். விரக்தி வீணர் செயல்! இறந்தவர்களுக்காக வருந் துவதில் என்னபய னிருக்கிறது? துர்க்காதேவியைத் துணை யடைந்தவர்களைத் துன்பமுந் துயரமுந் தொடமுடியுமா? பக்த விஜயம் முதலிய கதைகளில் வருகிற பக்தர்களைப்போ லும், விநாயகன், அன்னையின் அருட்பிரசாதத்தால் அபூர்வ மான ஆறுதல் பெற்றுன்.

---

# 4—பிளேக்.

அரை நூற்றுண்டு, அநாயாசமாய், அடிமை அந்தகாரத்தில் சோக நித்திரை செய்த ஆரியாவர்த்தம், 1897-ல் திடீரெனத் துடித்தெழுந்தது. மகாராஷ்டிரத்தில் இராஜீயக் கொந்தளிப்பு மகா உக்கிரமாயிருந்தது. அதற்குக் காரணமாய், அவ்வாண்டில், புனநகரில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டையும், சமூக சீர்திருத்த மகாநாட்டையும் சொல்லுவார்கள். அவைகளாலும் அரசியல்விழிப் பேற்படுவது ஆச்சர்யமல்ல. அன்னியர்களால் ஆளப்படும் அடிமை ஜனங்கள், இன்ன சமயம் இன்ன காரணத்தால்தான் எழுச்சி அடைவார்களென்று ஏதாவது நிர்ணயமிருக்கிறதா? அடிப்பரப்பிற் கொதித்துக் கொண்டிருக்கும் அக்கினிக்குழம்பு, மேலே மூடியிருக்கும் பூமியைப் பொத்துக்கொண்டு திடீரெனக் கிளம்புவதுபோல், அடிமைப்பட்டிருக்கும் ஜாதியும், எந்த நேரம், எந்த ஜாமத்திலோ எழுந்து புரட்சிசெய்யும். சமய சந்தர்ப்பமென்பது வெறும் புறத் தூண்டுதல்தான். அக நிகழ்ச்சிக்குப் புறம், உபகரணமேயன்றி உற்பவமன்று. காரியங்களெல்லாங் காரணங்களிற் பிறந்தவையல்ல.

இருளில் வழிதெரிந்து செல்வதற்கு விளக்கு ஒரு கருவியாயிருப்பதுபோல், அடிமையிருளிலிருந்து சுதந்திரஒளியிற் பிரவேசிப்பதற்கு மகாராஷ்டிரர்கள், சிவாஜியை ஒரு வீர விளக்காய் வைத்துக்கொண் டிருக்கிறார்கள். அகில இந்தியாவும் அவர்களைப் பின்பற்றுவது நலம். மகாராஷ்டிரர்கள் கொண்டாடுகிற சிவாஜி விழாவை ஏக காலத்தில் இந்தியா முழுமையுங் கொண்டாடலாம். சிவாஜி, மகாராஷ்டிரர்களுக்கு

மாத்திரம் உரித்தானவனன்று; இந்திய ரனைவருக்கும் உரியவன். வீரத்துக்கு, ஜாதி, மதம், தேச, தேசாந்தர மென்கிற வித்தியாசமுண்டோ?

சிவாஜி விழாவும், கணபதி உற்சவமும், புனா நகரத்தை ராஜத்துவேஷத்தின் விளைநில மாக்கிற்று. தீவிர தேசியவாதிகள், ஜனங்களிடம் தேச விஸ்வாசத்தை யுண்டுபண்ணி, தேச ஆவேசர்க ளாக்குவதற்காக அந்த உற்சவங்களை உற்பத்தி பண்ணினார்கள். இந்த இதிகாச நாயகனும் அதில் ஈடுபட்டான். அப்போது அவனுக்கு வயது (14) பதினான்கே.

அவ்வளவு இளம்பிராயத்திலே, விநாயகனுக்குப் பத்திரிகைபடிக்கும் பழக்கமேற்பட்டுத், தினசரி வழக்கங்களில் அதுவும் ஒன்றாய்-அத்தியாவசியமான தொன்றாகிவிட்டது. அதற்காக அவன் தபாலாபீசிற் காத்திருந்து, பத்திரிகைகளை வாங்கிப் பரமபிரியத்தோடு பிரித்துப் பார்ப்பான்? பிறருக்கும் படித்துக் காண்பிப்பான்.

அப்போது புனாநகரிற் பிளேக் நோய் பரவியிருந்தது. பிளேக், இந்தியாவைச்சார்ந்த நோயல்ல — மேனாட்டு ஏற்றுமதிச் சரக்கு—பிரிட்டிஷ் அரசாங்கம், இந்தியாவிலேற்பட்டதாலுண்டான லாபம். பிரிட்டிஷ்காரர்கள் இந்தியச் செல்வத்தைக் கொள்ளையடிப்பதுபோல, 'இந்த நோயும் ஏராளமான இந்திய ஜனங்களைக் கொள்ளை கொள்ளுகிறது. இது மகா கொடிய தொத்துநோய்-வைசூரியையும், வாந்திபேதி(காலரா)யையும்விடக் கொடியது—ஓட்டுவாரொட்டி.

புனப் பிளேக்கை நிவர்த்திப்பதற்கு, நிபுணர்கள் சிலர் நியமிக்கப்பட்டனர். அவர்கள் வைத்தியர்கள்—வைத்திய முறையிற் பல பரிகாரங்களைக் கையாண்டார்கள். அவை பர்மரருக்கும் பிறருக்கும் பிடிக்கவில்லை. வருமுன் காக்காமல் வந்தபின் காக்கும் பிற்போக்கான வைத்தியத்தாலென்ன பயன்? வியர்திகொண்டவர்களுக்குச் சிகிச்சைசெய்வதைவிட இறந்தவரை எடுத் தடக்குவதிலேதான், அந்த அதிகார நிபுணர்கள் அதிகச் சிரத்தை காட்டினார்கள். பெற்றோர்க்குப் பிள்ளைகள் செய்யவேண்டிய கடைசிக் கருமங்கள் செய்யவிடாமலும், உற்றார்க்கு உறவினர் செய்யவேண்டிய ஈமக்கடன்கள் முடிக்கவிடாமலும், பிளேக் உத்தியோகஸ்தர்கள், பிரேதங்களைக் கைப்பற்றிக்கொண்டு, வீடுகளைக் காலிசெய்து தாழிட்டனர். இதை ஜனங்கள் சகிக்கவில்லை. இதில் தோன்றிய அதிகார மிடுக்கு, ஆத்திரத்தை யுண்டுபண்ணிற்று; க்ஷாத்திரந் தீர்க்கச் சிலர் தயாரானார்கள்.

வசுதேவ பலவந்த பதகி க்குப் பின்னால், இந்தியர் எவரும் இத்தகைய காரியஞ்செய்யத் துணியவில்லையென்று சொல்லும்படி, ஆங்கிலப் பிளேக் அதிகாரிகளிற் பொறுப்பாளிகளான சிலர் கொல்லப்பட்டனர். அவர்களில் மிஸ்டர் ராண்டு என்பவர் முக்கியமானவர்.

அவர்கள் கொலைசெய்யப்பட்ட அன்று, விக்டோரியா மகாராணியின் வயிர விழா. விக்டோரியா நல்லவள்—நல்லவர்கள் யாராயிருந்தாலும் இந்தியர்கள் கொண்டாடுவார்கள். விக்டோரியா வயிர விழாவை இந்தியா ஏகமனதாய்க் கொண்டாடிற்று என்று அதிகாரிகள் கௌரவமாய்க் கூறிக்கொள்ள

முடியாதவாறு செய்துவிட்டது இக்கொலை என்று, அதிகாரிகள் அதிகக் கோபங்கொண்டனர். அகில இந்தியாவிலும், அரசாங்கத்துக்கு விரோதமான புரட்சிக்கு அடிகோலப்படுவதாய், அரசாங்க அறிக்கை கூறிற்று.

மகாராஷ்டிர முழுதிலும் ஒற்றர்குழாமும், வேட்டைக் கூட்டமும் சாரியடித்தது. சந்தேகிக்கப்பட்டவர்களெல்லாம் கைது செய்யப்பட்டார்கள்.

* நாடு சகோதரர் நாடு கடத்தப்பட்டனர்! "ஹா! நாடு கடத்தப்படுவதை ஒரு தண்டனையாக முதன்முதற் கற்பித்தானே, அவன் ஆணோடு பெண்ணோடு பிறந்திருப்பானா? அவன் நெஞ்சில் ஈரமென்பதிருக்குமா?" என்று, காங்கேயன் என்னுங் கதையில், வீரவிளக்கு வ. வே. ஸு. ஐயர் எழுதியிருக்கிறார். "நாடிழந்து மக்களையும் நல்லாளையும் பிரிந்து, வீடிழந்திங் குற்றேன் விதியினை என்சொல் கேனே!" என்று பாஞ்சாலச் சிங்கம் லஜபதிராய் பிரலாபித்ததாகப் பாரதியார் பாடியிருக்கிறார். காலவரையறையின்றி நாடு கடத்துவது, சித்திரவதை செய்வதற்குச் சமமானது.

பரமதியாகி பாலகங்காதர திலகரும் தண்டிக்கப்பட்டார். சபேக சகோதரர் தூக்குத்தண்டனை விதிக்கப்பட்டனர். அதற்காக அவர்கள் அழுது பிரலாபித்தார்களா? "ஐயோ இந்த அவகேடு வந்ததே" என்று அங்கலாய்த்தார்களா? எதுவுமே நடக்காததுபோல், விசாரமற்றும், விகற்பமற்றும், சந்தோஷ சம்பன்னர்களாயிருந்தனர்.

---

* இரண்டு மராட்டியச் சகோதரர்கள். இவர்களுக்கு "நாட்டு" என்று பெயர். சிங்கத்துணிவுள்ள சிறுவர்கள்.

* சபேகர்கள், சனாதன ஹிந்துக்கள். கீதா மார்க்கத்தைப் பின்பற்றிப் பற்றின்றி வாழும் பரம யோகிகள்—மரண பயத்தை வென்ற மகாதியாகிகள். அவர்களுக்கு அழிவேது? தூயவர்கள், தூக்குத் தண்டனையைத் "தூ"வென்று தள்ளி விட்டனர். சுருக்குக் கயிற்றைக் கழுத்தில் மாட்டிக்கொண்டு தொங்கவேண்டிய அத்தினத்தில், அதிகாலையில் அவர்கள் எழுந்திருந்து, ஸ்நானஞ் செய்துவிட்டு, சுத்த வெண்துணி யுடுத்தி பகவத் கீதையைப் பாராயணம் பண்ணினார்கள். தூக்குமேடைக்கு அழைத்துச் செல்லப்படும்போதும், தூக்கு மேடையில் ஏறி நிற்கும்போதும், சுருக்குக் கயிற்றைக் கழுத்தில் மாட்டியபோதும், கடைசி மூச்சை விட்டபோதுங்கூட அவர்கள், பகவத் கீதையின் பாசுரங்களைப் பரமபக்தியோடும் பாடிக்கொண்டிருந்தனர். அதைக்காண, அதிகாரிகள் நெஞ்சு குமுறினார்கள். "ஆ! எப்பேர்ப்பட்ட தியாகாத்மாக்கள்!" என்று எதிரிகளே வியந்தார்கள். சபேகர்களின் முகத்தில் சஞ்சலம் சிறிதாவதிருந்ததா? தாமரை மலரைவிடச் சந்தோஷத்தால், முகம், மலர்ந்திருந்தது.

இந்தச் சேதிகளை யெல்லாம் பத்திரிகையிற் படித்த பால விநாயகன் பரவசமானான். ஹிருதயம் அப்படியே ஆடிக் குலுங்கிவிட்டது. உள்ளநீர் ஊற்றிருந் தொழுகின நெடுங் கண்! "எதிர் காலத்தை எதிர் நோக்கோடு நோக்கி இன்புற வேண்டிய இளம் பிராயத்தில், இந்தச் சபேகர்கள் இறந்து போயினரே" என்று ஏங்கினான் "ஜனனி ஜென்ம பூமியின் பொருட்டுத், தாய் தந்தை தமர் தாரம் அனைவரையும்

* இரண்டு சகோதரர்கள்—மராட்டிய வீரர்கள்—மகா தியாகிகள்.

மறந்து மறைந்துவிட்டனரே" என்று உள்ளம் உருகினன். அப்புறம் ஓர் ஆழ்ந்த யோசனை! "இதோ இச் சபேகர்கள் போய்விட்டனர்! ஆமாம்! தேசத்துக்காக—தேச விடுதலைக் காக அவர்கள் ஜீவனை விட்டார்கள். தமக்காக வன்று—தமது தாய் தந்தையருக்காகவு மன்று–தேச சமாஜத்துக்காக–தேச தேவதைக்காக அவர்கள் அந்தர்த்தான மாயினர். மரணம்! மரணமேன்பதேன்ன? வேறும் மறைவேயன்றோ! பிறந்தவேல்லாம் இறந்துதானே தீரவேண்டும்! என்றைக் காவ தோருநாள் நானும் சாகிறவன்தான். வியாதியோ வயோதிகமோ, என்னை யோருநாள் விழுங்காமல் விடப்போவ தில்லை. பின்னரேன் உண்டு உடுத்தி உறங்கிச் சுகித்திருக்க வேண்டும்? பூமித்தாயின் போருட்டுத் தேச மாதாவின் திருப் பணி புரிந்து தியாகியாகவேண்டும்! அதில் ஜேயம் அல்லது சாவு, இரண்டிலோன்று சம்பவிக்கட்டும். கர்ம வீரர்கள், பலா பலன்களைத்தானு கணக்கிடுகின்றனர்!"

அவ்வளவுதான், கோயிலறைக்குட் புகுந்தான்; வீட்டுத் தெய்வமான வீராயியைச் சரணடைந்தான். குல தேவதை யான துர்க்கையின் காலடியிலிருந்து விண்ணப்பஞ் செய்யத் தொடங்கினன்:—

"ஹே தாயே! உன்னைச் சாக்ஷிவைத்துச் சோல்லுகி றேன். இதோ இந்த உடல், இதன் சோத்துச் சுகம், எல்லா வற்றையும் என் தேசத்துக்கு அர்ப்பணித்து விட்டேன். சிவாஜியின் வலது தோளிலிருந்து வேற்றியளித்த வீரம் மையே! எனது ஹிருதய பீடத்தில் ஏறியிருந்து எனக்குந் துணைசேய்!" என்று வரங்கேட்டான். அவ்வளவுதான்,

உடலில் வீறு ஏறிற்று. இதயத்தில் ஈரிஷ் ஏற்பட்டது. உரோமக் கால்களில் உணர்வுண்டாயிற்று. தேவி திருவாக் களித்துவிட்டா ளென்று திருப்திகொண்டான்.

இதைத் தொடர்ந்து இன்னொரு புல்லரிக்குஞ் சம்பவ மும் ஏற்பட்டது: அதாவது: சபேக சகோதரர்களுக்கு விரோதமாய்ச் சாட்சி சொல்லி, அவர்களைக் காட்டிக் கொடுத்த கோழைகள் இருவர் கொல்லப்பட்டனர். இளைய சபேகரும், ரணதேவும் கொலை செய்தார்களென்று குற்றஞ் சாட்டப்பெற்றுத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டனர். அவர்களும், மூத்த சபேகர்களைப்போல், பரம யோகிகளாக வும், பரம தியாகிகளாகவும் பலிபீட மேறினர்கள். இதைப் பத்திரிகைகளிற் படிக்க, விநாயகன் இன்னும் வீறுகொண் டான். அவனெடுத்துக்கொண்ட சபதம்—வீரப் பிரதிக்ஞை, இன்னும் வலுவாய் வேரூன்றிற்று. சுயம் தேச பக்தனுனன்.

அது முதல் விநாயகனுக்கு வேறெதிலும் புத்தி யோட வில்லை. தேசத்தைச் சுதந்திரம் உடையதாக்கவேண்டும்; அல்லது சபேகர்களைப்போல் சுவர்க்கஞ் சேரவேண்டும். இந்த ஆசைகள்தான் அவன் எண்ணத்தில் எந்நேரமும் இருந்துவந்தன. எண்ணினல் எண்ணியது நண்ணிவிடுமா? செயல் வேண்டும்! செய்கை செயல் வேண்டும்! விநாயகன் வெறும் வாய்ப்பேச்சு வீரனன்று—கர்ம வீரன்—காரிய வீரன். தேசமிருக்கும் தீன நிலைமையை யெடுத்துக் காட்டி, அதற் காகச் சபேக சகோதரர்கள் மூவரும், ரணதேவருஞ் செய்த தீரவீரச் செயல்களையுந் தியாகத்தையுங் கூறி, தோழர்களையும் மாணவர்களையும் ஒன்று சேர்த்து, ஒரு தேசபக்த சமாஜத்தை

உண்டுபண்ணினன். அவர்கள், ஆயுதந்தரித்து, அரசாங்கத் துக்கு விரோதமாய்ப் புரட்சிசெய்து, வேண்டுமாயின், வாள் பிடித்தவாறே பிராணனை விடுவதென்று பிரதிக்ஞை செய்து கொண்டனர்.

இவ்வளவில், ஒருநாள் இரவு, விநாயகன் விளக்கருகே வீற்றிருந்து ஏதோ எழுதிக்கொண் டிருந்தான். நெடுநேரம் நித்திரையின்றி என்ன செய்துகொண் டிருக்கிறனென்று காணத், தந்தை—தாமோதரபந்தன், மைந்தனிடம்சென்றன். கண்ணீர் தாரை தாரையா யோடிக்கொண் டிருந்தது. கண் கள் காகிதத்தில் நிலைக்குத்தியிருந்தன. "விநாயக! விநாயக!" என்று கூப்பிட்டார்! பதிலில்லை. தட்டியழைத்தார்; அதற் கும் பேச்சில்லை! வியப்புந் திகிலுங் கொண்டவராய், விநாய கன் கையிலிருந்த காகிதத்தை எடுத்துப் படித்துப்பார்த்தார். ஆ! அதென்ன? சிம்ம சொர்ப்பனங் கண்டதுபோல், அச்ச முந் திகிலும் அவர் முகத்தில் ஏன் ஏற்படுகிறது? அப்படி யென்ன அபாயகரமான சங்கதியை அவன் அதில் எழுதி யிருக் கிறன்? சபேகர்களின் சூரத் தனத்தையும் தியாகத்தையும் பற்றிய பாக் (பாடல்) கள்!

அவற்றில் வீரம் ஸ்புரித்தது; ஆவேசம் துள்ளித் துடித் தது. சபேக சகோதரர்களின் பேரைச்சொன்னலும், போலீஸ் காரர்கள் சந்தேகிக்கக்கூடிய அக் காலத்தில், அவர்களைப் புகழ்ந்து பாடுவதென்பது அபாயமல்லவா? அபாயத்தில் அருமை மகன் அடியெடுத்து வைத்திருக்கிற னென்பதைக் காண எந்தத் தந்தை சகிக்க முடியும்? தாமோதரபந்தன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். அப்போதும் விநாயகன் அசையவில்லை.

தாமோதரபந்தன், திலகரின் தேசபக்த சமாஜத்தைச் சேர்ந்தவர். அவரிடமிருந்துதான், விநாயகன் தேசபக்த விரதத்தை அப்பியசிக்கவும் அநுஷ்டிக்கவுந் தொடங்கினன். மென்மையில் வன்மை ஏறி, விநாயகன் வீரர் கூட்டத்தில் ஒருவனுனன். அவ்வளவு இளமையில், வீரத்தை வினயமாய்க் கையாளுவ தெப்படியென்று தந்தை சிந்தை நொந்தார். "மகனே! நீ சிறுவன். 'இளங்கன்று பயமறியாது' என்று துணிந்திருக்கிறுய். வாலிபம் துடுக்குடையதென்பது வாஸ்தவம். அதற்காக ஆபத்தில் தலைகால் தெரியாமல் குதிக்க வேண்டுமா! என்ன? விளக்குவைத்துக்கொண்டு கிணற்றில் விழுவது அறியாமையன்றோ? நமது குலவிளக்கான சிவாஜியைப் படித்திருக்கிறுய்! அவன் இப்படித்தானு ஆபத்தில் அடியெடுத்து வைத்தான்? காலத்துக்காகக் காத்திருந்து செய்யாத காரியம் வீரியமன்று. உலகத்துக்கு நீ எவ்வளவோ பயன்பட வேண்டியவன். தேசம் எவ்வளவோ தீரவீரச்செயல்களை உன்னிடமிருந்து எதிர்பார்க்கிறது. ஒரு கரணையோடு ஒரு கரணை சேராமல், தேசமாதாவைப் பின்னிப் பிணைத்திருக்கிற சங்கிலியைத் தகர்ப்பதற்குத் தருண மிதுவல்ல. இரவோடிரவு கண்விழித்து, ரகசியத்திற் சாமக்கிரியைகளைச் சேகரித்து, எதிரிகள் அயர்ந்திருக்கிற சமயம், எச்சரிக்கையின்றியன்றோ வேள்வி நடத்தவேண்டும்! சிங்கபலம் நமக்கிருந்தாலும், சிங்கத்தை அதன் குகையில் தாக்குவது அது விழித்திருக்கும்போதல்ல. சபேகர் சகோதரர்கள், மஹா தியாகிகள் என்பதை எவர் ஆக்ஷேபிக்க முடியும்? அவர்கள் செய்து காட்டிய தீரச்செயலைக் கண்டு, சத்துருக்கள் எச்சரிக்கையடைந்திருக்கிறபோது, "பரிகொடுத் தவனுக்குப் பலமதி"

என்பதுபோல், போலீஸ்காரர்கள், கண்டவர்கள், நின்றவர்களையெல்லாம் அரசியல் விரோதிகளாய் அனுமானிக்கிற சமயத்தில் தேசபக்தர்கள் அஞ்ஞாதவாசஞ்செய்வதுதான் அழகு. அசகாய சூரர்களான பஞ்சபாண்டவர்கள், பெட்டிப் பாம்பு போல் ஒரு வருஷம் அடங்கியிருந்து, அப்புறந்தானே பாரத யுத்தத்தை நடத்தினர்கள்! அதுபோல், அரசாங்கத்தின் அமளி குமளிகளெல்லாம் அடங்கி, அதிர்ச்சியற்ற அமைதியான நிலைமைக்கு அது வரும்வரை, நாம் அடங்கியிருக்க வேண்டும். அப்பால் அது அயர்ந்திருக்கும்போது, நாம் நமது அழித்தல் வேலையில் அடியெடுத்து வைக்கவேண்டும். ஆக்கவேலைக்கு அழித்தல்வேலை அவசியமா யிருக்கலாம். அதற்கு இடங்காலத்தை யேற்படுத்திக் கொள்ளவேண்டியது நமது வேலை. பொறு மகனே! பொறு!! காலம் வரும்வரை காத்திரு!!! கடமை செய்யவேண்டிய காலம் எதிரே யிருக்கிறது. அதுவரை நிம்மதியாய்ப் பிறரைத் தயாரிப்பதைவிட உன்னை நீயே திடப்படுத்திக்கொண்டு இரு! சந்தர்ப்பத்தாற் செய்யப்படாத சங்கற்பம், சாத்தியமாகாது" என்று நானு உபாயத்தாலும், தந்தை ஹிதோபதேசந் தந்தார், தனயனுக்கு.

இந்தஇடத்தில் தாமோதரபந்தன், மைந்தனுக்குத்தந்தை செய்யவேண்டிய கடமையைச் செய்திருக்கலாம். விநாயகன் அதை யேற்ருனு? அன்பின் ஆழத்திலிருந்து சொல்லப்பட்டாலும் அந்த ஹிதோபதேசம், அவன் செவியி லேறிற்ரு? யாருக்கோ சொல்லுகிருர் என்று லட்சியம் செய்யாதவனுய்த் தன்வழியும் தானுமாய் முன்னிலும் பன்மடங்கு வேகத்தோடு விநாயகன் போய்க்கொண் டிருந்தான். முடிவற்ற சபேகர்

பிரபந்தத்தை, மறுபடியும் தொடுத்து, வீட்டில் அப்பாவும் அண்ணனும் குரட்டைவிட்டுத் தூங்குந்தருணங்களில் எழுதினான். அப்புறம் பகலிலே, தனது பால தோழர்களுக்கு அவற்றைப் படித்துக் காண்பித்து மனப்பாடஞ் செய்து மஹராஷ்டிர முழுதிலும் பரப்பமுயன்றான். அந்த எதிரொலி, அந்த மாகாணத்தில், இன்றுவரை அதிர்ந்துகொண்டிருக்கிறது. அதைக் கேட்டுக் கண்ணீர்வடிக்காத கண்கள், கண்களல்ல—புண்கள்.

ஆழக் கடலுக்கும், அலகை (பேய்)க்கும் மத்தியில் அகப்பட்டுத் தவிக்கும் ஆத்மாவைப்போல், பிளேக்குக்கும் போலீஸுக்கும் மத்தியில், மஹராஷ்டிர மக்கள் பட்ட துயரம் கொஞ்சநஞ்சமல்ல. வீட்டுக்கு வீடு நோய் வேட்டையாடிற்று. வீட்டுக்கு வீடு போலீஸ்காரர்களும் வேட்டையாடினார்கள். கொள்ளை நோயைவிடப் போலீஸாரின் உபத்திரவத்துக்கு ஜனங்கள் அதிகம் அஞ்சினார்கள். நோய் வருகிறது; திடீரென மனிதன் மாண்டுமடிகிறான். அதில் சித்திரவதையில்லை. ஏதோ இருந்தான் இறந்தான் என்று உலகம் அவனை மறந்துவிடுகிறது. அரசாங்கத்தின் அட்டூழியமோ, ஒருவனைத் தொடுவதோடு அல்லது கைதிசெய்வதோடு நின்றுவிடுகிறதில்லை. நகக்கண்களில் ஊசியேற்றி உண்மையைக் கிரகிக்கிறது என்கிற சம்பிரதாயத்தில் ஆரம்பித்து, விசாரணை என்கிற கோரநாடகம் நடந்து, தூக்கு அல்லது அந்தமான் அல்லது சிறை முதலிய தண்டனைகளில் ஏதாவதொன்றை அவனனுபவித்து முடிகிறவரை, அது அவனை அணுஅணுவாய்ச் சித்திரவதை செய்கிறது. சாவைத் தொடரும் போலீஸாரின் சஞ்சலச் செயல்கள், விநாயகன் மனத்தை மகா வயிரமாக்கிற்று.

இதுவரை நகரத்திற் சாரியடித்த நாசகாலி, (நோய்) விநாயகன் ஊருக்குள்ளே சாட்சாத்தாய்ப் பிரவேசித்தாள்—பாகூர்க்கிராமத்தையும் பிளேக் பற்றிக்கொண்டது. தந்தை தாமோதரபந்தன் களப்பலியானுன். விநாயகனும் அன்னையும், தம்பியும், அருமை மதினியும் எவ்வளவோ முயன்று பார்த்தார்கள், என்னென்னவோ சிகிச்சைகளெல்லாம் செய்தார்கள். பிளேக் கண்ட பிதா, அவர்களை அனுதைகளாய் விட்டு அந்தர்த்தானமாகிவிட்டார். தாய்தந்தையரையிழந்து, சவர்க்கார் சகோதரர்கள், தங்களுக்குத் தாங்களாகவே வாழ்க்கையை யிழுக்கத் தொடங்கினுர்கள்.

வழக்கம்போல் போலீஸார் புகுந்தனர். இப்பொழுதுதான் சவர்க்கார் சகோதரர்களுக்கும், சர்க்காருக்கும் நடக்கிற முடிவற்ற போர் ஆரம்பமாகிறது. தாட்சண்யமும் தயவுமின்றிச் சர்க்கார் அதிகாரிகள், அவர்களை வீட்டைவிட்டு வெளியில்தள்ளித் தாழிட்டனர். வீடுவாசலின்றி விரட்டப்பட்ட அக் குடும்பம், எங்குச் செல்வது ? தலைசாய்க்கச் சிறிது நிழலுக்கும் தரித்திரம் வந்துவிட்டது. ஊருக்கு வெளியே ஒரு ஓட்டைமடம்; அதைத் தஞ்சமென் றடைந்தார்கள். அங்காவது ஆறுதல் கிடைத்ததா ? அங்கேயாவது பிளேக் அவர்களை அமைதியோ டிருக்கவிட்டதா ? ‘அபாக்கியம் அடுக்கடுக்காய்வரும்—ஒன்றேடு நிற்காது’ என்பதுபோலத் துன்பமும் துயரமும் அவர்களைக் குதிங்காலில் துரத்திற்று. இளைய சவர்க்காரையும் பிளேக் பிடித்தது. ஏகாந்த மண்டபத்தில், ஏகத் திறவையான கூரையின்கீழ், நாய் நரிகள் இரவும் பகலும் ஓலமிடும் ஊளைக்குரல் மத்தியில், நோயின் உபத்திரவத்தால்

ஊணுறக்கமின்றி உருண்டு புரண்டுவரும் ஒரு சிறுவனைக் கிடத்திக்கொண்டு, அந்தோ! அந்த அபலைக்குடும்பம், அப்பொழுது பட்ட அவதி இவ்வளவு அவ்வளவல்ல! சித்தப்பாவையும் சிக்குப் பிடித்துக்கொண்டது. "பட்டகாலிலே படும் கெட்டகுடியே கெடும்" என்பது எவ்வளவு பிரத்தியட்சமாகிறது பாருங்கள்! அச்சமயம், அவர்கள் மனம் என்னபாடு பட்டிருக்கும்? அண்ணியார் எவ்வளவு அலறு அலறியிருப்பாள்?

சித்தப்பா செத்துவிட்டார். தம்பி தரையிலே கிடக்கிறான். இன்றோ இன்னும் சற்றுநேரத்திலோ, எமன் இவனையும் எடுத்துக் கொண்டுவிடுவான் என்று நினைக்கிறபோது, அவர்களிதயத்தில் ஆயிரம் ஆணிகள் அறைந்ததுபோ லிருக்கும்! மனித உதவியென்பது எதிர்பாராப் பொருளா யிருந்தது. ஒரேபுயல் ஊரை வளைந்திருக்கும்போது, யார் யாருக்கு என்ன உதவி செய்யமுடியும்? ஒரு தெருநாய்; அதை எவரும் 'என்னது' என்று சொந்தம்பாராட்டிச் சொல்லவில்லை. அதன் எண்ணத்தில் என்ன தோன்றிற்றோ? அதற்குத் தயவும் பரிவும் எங்கிருந்து வந்ததோ? இரவும் பகலும் அது அவர்கள் காலடியிலிருந்து காவல் புரிந்தது—வயிரவன் காவல்.

மூத்த சகோதரன்—கணேசனுக்கு, நாவிகையில் ஒரு நண்பரிருந்தார்—பள்ளிச் சிநேகர்—குசேலனும் கிருஷ்ணனும் போல். அவருக்கு, அந்தக் குடும்பம் படுகிற அவதி சகிக்காமல் தன்னுடைய வீட்டுக்கு வரும்படி அழைத்தார். நட்புரிமையால் அழைக்கும்போது மறுக்கமுடியுமா? அல்லது மறுக்கத்தான் மருக்கலாமா? பாழும் மண்டபத்திலிருந்து பட்டணத்துக்கு அக் குடும்பம் குடிபோயிற்று.

நாராயணன், ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டான். வீட்டில் மனைவியையும் தம்பி விநாயகனையும் விதியே என்று விட்டுவிட்டு, நாராயணனுக்குத் துணையாய்க் கணேசன் ஆஸ்பத்திரியிலிருந்தான். நாஸிகை நகரிலும் பிளேக் பரவியிருந்தது. அதனால் புறக்கணிக்கப்பட்ட நகரம்போல் அது இருந்தது. அநேகர் ஊரைவிட்டு ஓடிவிட்டார்கள். பட்டப் பகலிலும் பட்டணத்தில் ஜன நடமாட்டத்தைப் பார்க்கமுடியாது. விதியின் வசம் உயிரை ஒப்படைத்துவிட்டு தைரியத்தோடு ஊரிலிருந்த மக்களும், வீட்டைப் பூட்டிக்கொண்டு அதிகம் வெளியேருமலிருந்தனர். ஆஸ்பத்திரியி லிருக்கிற அண்ணனுக்கும் தம்பிக்கும், ஆகாராதிக ளெடுத்துக்கொண்டு இளம் விநாயகன், ஜன சந்தடியற்ற தெருக்களின் வழியாய், ஊருக்கு வெகுதூரம் புறம்பே யிருந்த ஆஸ்பத்திரிக்குச் செல்வது, ஆரம்பத்தில் அவனுக்கும் அச்சத்தையளித்தது. துணிச்சலையெல்லாம் சேர்த்துப் பிடித்துக்கொண்டு, துணையின்றித் தினம் மூன்றுவேளை அவனங்குப் போவதும் வருவதுமாயிருந்தான். மாலையில் இருட்டிவிடும். மையிருளில் ஒண்டியாய் வரவேண்டும். அப்போது அவன் எண்ணத்தை வேறிடத்தில் வைத்துக்கொண் டிருப்பான். அந்த இடந்தான் ஆரியாவர்த்தம். அதிலே சபேகர் சகோதரர்கள், ரணதேவர், அப்பேர்ப்பட்ட தியாகாத்மாக்களின் தெரிசனம். தானும் அவர்களைப்போல் ஆகவேண்டுமென்கிற ஆசை. அவற்றிலே அச்சம் அமிழ்ந்துவிடும்.

ஒருநாள் வழக்கம்போல் விநாயகன் ஆஸ்பத்திரிக்கு ஆகாரம் எடுத்துக்கொண்டு போனுன். அன்றைக்கு அண்ணன் ஆஸ்பத்திரி வாசலில், ஆஜர்ப்பட்டி போட்டுக்கொண்டு

வந்து நிற்கவில்லை. காத்திருந்தான்; அப்போதும் அன்னையைக் காணேம். சந்தேகமுண்டாயிற்று; சரீரம் நடுங்கியது. அழுகையையும் ஆத்திரத்தையும் அடக்கிக்கொண்டு விசாரித்தான். ஐயோ! அன்னையையும் அம் மஹாமாரி அணைத்துக் கொண்டாள். தீரனுக்குரிய தைரியத்தோடு மனதைத் திடப்படுத்திக்கொண்டு, செய்யவேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்துவிட்டு, வெகுநேரங்கழித்து வீடுதிரும்பினன். அண்ணியிடம் அச்செய்தியை யெப்படிச் சொல்லுவது? அடைத்து வைத்திருந்த கண்ணீரை ஆறுய்ப் பெருக்கத்தான் அவனால் முடிந்தது! இலக்குமணனைப்பிரிந்த ஊர்மிளா, சாக்கேதத்தில் (அயோத்தியில்) சஞ்சலத்தைச் சகித்துக்கொண் டிருந்தது போல், அவ் வீராங்கனையும், அத் துக்கச் செய்தியைச் சகித்தாள். ஹா! வீரத் தாய்மார், பாரததேசத்தில் அருகிவிட்டார்கள் என்பது எவ்வளவு அறியாமை!

விநாயகனும் * வாஹினியும், விசனக்கடலை விரைவிற் கடந்தார்கள். கொடூரியான கொள்ளை நோய்க்குக் கொஞ்சம் தயவு வந்து "இவ்வுலகத்திலேதானே இருங்கள்" என்று சொல்லிப் போனுள்-சகோதர ரிருவரும் தப்பிப்பிழைத்தனர். மறுபடியும் சவர்க்கார் சகோதரர் சந்தோஷ சம்பன்னராயினர். ஆநந்தம், அக் குடும்பத்தில் அழகு நிர்த்தனம் செய்தது.



* அண்ணன்-கணேஷ தாமோதர சவர்க்காரின் மனைவி பெயர்.

# 5—வேள்வி ஆரம்பம்.

ஆசையை, நோயென்று வேதாந்திகள்சொல்லுகிறார்கள். சகட்டுவாக்கில் அப்படிக் கூறுவது தவறு. ஆசை, அமிர்தம். அதை மனிதன் அருந்தவில்லையானால், உலகம் நடவாது. ஒரு காரியத்தைச் சிறிதோ பெரிதோ செய்ய வேண்டுமானால், முதலாவது ஆசை வேண்டும். நிராசையோடு செய்யப்படுகிற எந்தக்காரியமும் நேரே முடியாது.

விநாயகனுக்கு நாட்டாசை நன்றாய்ப் பிடித்திருந்தது. அத்தோடு, பொறுப்பறியாத புதுப்பிராயமான வாலிபமும் கூடிக்கொண்டதானால், நெருப்புப்பிடித்த வீட்டில் காற்றுங் கலந்துகொண்டது போலல்லவா?

பிளேக்குக்குப் புறங்காட்டி ஓடிவந்த சவர்க்கார்கள், கலாசாலைக் கல்வியை முன்னிட்டு, நாஸிகை நகரிலேயே தங்கி விட்டனர். பள்ளித் தோழர்களுக்குப், பாரததேசத்தின் பராதினத்தை எடுத்துக்கூறி, விநாயகன் ஓர் இளம் தேசபக்த சமாஜத்தைச் சிருஷ்டிக்கத் தொடங்கினான். தோழர்களைக் கொண்ட சங்கந் தோன்றிற்று. **மித்திரமேளம்** அதாவது சிநேகர்கழகம் என்று அதற்குப் பெயரிட்டனர். பின்னர்க் கொண்டுவரப்படும் போலீஸ் தஸ்தாவேஜிலிருந்து, அதுபிறக்கும்போதே புரட்சிப் பிரகிருதியுடையதாயிருந்தது என்று தெரிகிறது. இந்தியாவில் அன்னிய ஆட்சியை அழித்துச், சுய ஆட்சியை ஸ்தாபிப்பதுதான் அதன் பிரதம, பிரதான, பிரபல நோக்கமாயிருந்தது. அதன் நடவடிக்கைகள், இரவும் பகலும்போல், அந்தரங்கமாகவும் பகிரங்கமாகவும் இருந்தன.

வெளிப்பார்வைக்கு, ஏதோ பையன்கள் கூடுகிறார்கள் விளை யாடுகிறார்கள், பொழுது போக்காய் என்று தோன்றும். அதனடியிலிருந்த அபாயத்தை, அப்பொழுது அரசாங்கமும் அறியவில்லை. அவ்வளவு இரகசியத்தில் விநாயகன் வேலை செய்தான்.

மித்திரமேளத்தின் வேலைத்திட்டத்தை மொத்தமாகவும், பிரித்துப் பிரித்துங் கூறுவதென்பது முடியாதகாரியம். அது நல்லதோ கெட்டதோ, அதன் கொள்கை உயர்ந்ததோ, தாழ்ந் ததோ, அதன்தத்துவம் விரும்பத்தக்கதோ தகாததோ, அவற் றைப்பற்றி அபிப்பிராயங் கூறுவதென்பது அதிகப் பிரசங்கித் தனமாகும். மேலும் அதற்குரிய ஆதாரங்களும் அகப்படுவதா யில்லை.

1900-ம் ஆண்டில் அந்தச் சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. அற்ப சொற்பகாலத்தில் அது செய்திருக்கிற அபாரவேலையை ராட்சசமென்று சொல்லவேண்டும். சிவாஜி விழா, கணபதி யுற்சவம், இவைகளெல்லாம் மித்திரமேளத்தின் சிருஷ்டிகள். சாதாரண உற்சவங்களைப் போன்றதல்ல அவைகள். ஏதோ கோயிலுக்குப் போய்த் தூப தீப ஆராதனை செய்துவிட்டு வருவதுபோ லன்று. ஆயிரமிடங்களில், ஆயிரம் பேர், ஆயி ரம்விதத்திற் பிரசங்கம் செய்வார்கள். அவற்றில் தேசபக்தி யும், மதப்பற்றுதலுந்தான் போதிக்கப்படும். வேதாந்த சித் தாந்த ரூபமான வேலைகள், வெகு குறைவாகவே அனுஷ்டிக் கப்பெறும். எல்லாவற்றிற்குந் தேசீயவர்ணந் தீட்டித், தேச பக்தர்களைச் சிருஷ்டிப்பதுதான், அவ் விழாக்களின் அடிப் படையான நோக்கமா யிருந்தது.

மித்திரமேளத்துக்கென்று தனிப்பட்ட காரியாலயத்தை, அதனங்கத்தினர்கள் அமைத்திருக்கவில்லை. பள்ளிக்கூடங்களுங் கலாசாலைகளுந்தான், மித்திரமேளத்தின் வலிய கோட்டைகளாயிருந்தன. பாடங்களை உபாத்தியாயர்கள் போதித்துக்கொண்டிருக்கும்போது, புரட்சிப் பிரசுரங்கள், மேஜைகளுக்கடியில் வரிசை வரிசையாய்க் கைமாற்றப்பட்டுப் படிக்கப் பெற்றுவந்தன. பள்ளிப்பாடங்களோடு அநேகமாய்—அதிகமாய்க்கூடப் புரட்சிப் பாடங்கள்தான் மாணவர்களுக்கு ஏறிவந்தன. மாலைகளில் மைதானங்களில் இரகசியத்தில் மந்திராலோசனை மன்று கூடி, மேல் நடக்கவேண்டிய வேலைகளுக்குத் திட்டங்களுஞ் சட்டங்களும் போடுவார்கள். அதைத்தான் விநாயகன், உண்மையான தேசிய சர்வகலாசாலை என்று அழைத்தான். அங்குத் தேசபக்தர்கள் சிருஷ்டியானவுடன், தேசிய வேலைகளும் உருப்பெற்றன. தேசத்துக்காக உயிரைக்கொடுத்த தியாகிகளைப் போற்றவும், அவர்களைப் பின்பற்றவுந் தோழர்களுக்கு உணர்வு உதித்தது. தேசத்துக்காக உயிரைக் கொடுக்கவுந் துணிந்தனர். தேசபக்த விரதமெடுக்கப்பட்டது. தேசிய பிரதிக்ஞைகள் செய்தார்கள். இவை தான், இந்தியா முழுமையும் புரட்சி விதை விதைக்கப்பட்டதற்கும், புரட்சிப் பயிர் வளர்க்கப்பட்டதற்கும் ஆதிபீஜங்கள்.

பரகஸியப் படுத்தப்படாத ரகஸியமில்லை. உலகத்தில் எதுவும் இதுவரை ரகஸியமா யிருந்ததுமில்லை. அதிலும் மாணவர்கள்-இளங்கன்றுகள் செய்கிற காரியம், எப்படி, எத்தனைநாளைக்கு இரகஸியமாகவே யிருந்துவிடும்? "ஊர்வாயை மூட உலைமூடி யில்லை" யென்றும் "உதட்டை முட்டியது ஊரை முட்டும்" என்றும் பழமொழிகள் பகரப்படுகின்றன.

கலாசாலை அறைகளில் நடந்த அரசியற் பயிற்சிகள், அவற்றின் நாலு சுவர்களுக்குள்ளேயே அடைபட்டுக் கிடக்கவில்லை. போலீஸ்காரர்கள் எப்படியோ மோப்பம் பிடித்துவிட்டனர். கலாசாலை நிர்வாகிகளுக்குக் கண்டிப்பான உத்தரவு போட்டு, மாணவர்கள் நடவடிக்கைகளைக் கவனிக்கும்படி கட்டளையிட்டனர்.

இவ்வளவில், மித்திரமேளம் பிறந்து ஓராண்டு முடிவதற்குள், விநாயகன் பிரவேச பரீட்சையில் தேறிவிட்டான். இனி மேலே படிப்பதற்கு நாஸிகையி லிடமில்லை. புனாவிற்குப் போவதென்று ஏற்பாடாயிற்று. நாஸிகையை விட்டுப் புறப்படுவதென்று குறிக்கப்பட்டிருந்த நாளில், மித்திரமேளம், ஓர் பிரிவுபசாரக் கூட்டத்தை நடத்திற்று. பல பிரபலஸ்தர்களும் அதில் பங்கெடுத்தனர். அக்கிராசனரும், பேச்சாளிகளில் அநேகரும் விநாயகனின் பிரிவுக்கு வருந்தினர். பிரிவுபசாரப் பத்திரமும் பிரிவைப் பிரலாபித்தது. விநாயகன் பதிற்கூறும் போது எல்லார் கண்களையும் எளிதில் துடைத்துவிட்டான். "ஒரு பொறி ஊரெங்கும் நெருப்பு'' என்பதுபோல், இதோ நாஸிகையோடு அடங்கிக்கிடந்த அக்கினியை எடுத்துக் கொண்டு புனா போகிறேன். பெர்கூஸன் காலேஜில் இந் நெருப்பைக்கொண்டு, ஒரு பெரிய வேள்வி வளர்க்கச் செய்கிறேன். அதனொளி, அகில மஹாராஷ்டிரத்திலும், அகில ஆரியாவர்த்தத்திலும் பிரதிபலிக்கப்போகிறது. தேசத்தின் பல பாகங்களிலிருந்து படிக்க வந்திருக்கும் தோழர்கள், இந் நெருப்பை அள்ளிக்கொண்டுபோய், இந்தியா முழுமையும் அவிக்கமுடியாத அமரஜோதியை உண்டுபண்ணுவார்கள். நாடுகள் தோறும், நகரங்கள் தோறும், கிராமங்கள் தோறும்,

வீதிகள்தோறும் வேள்வி வளரும். ஓரிடத்திலிருந்துகொண்டு, ஒரு கண்டத்தின் உணர்ச்சி நரம்பைக் கட்டிக், தூங்கிக் கிடக்கும் ஜாதியை விழிக்கச் செய்வதற்கு இது ஒரு புது வழி. இதில் எனது லட்சியம் ஈடேறினுலுஞ்சரி இல்லாவிட்டாலுஞ்சரி, முயன்று முடிக்கப் போகிறேன்" என்றான்.

பேர்கூஸன் காலேஜில் விநாயகன் பிரவேசித்தது முதல், தேசபக்தி பிரளயம் அங்கு பிரவகிக்கத் தொடங்கிவிட்டது. உணர்ச்சியற்ற ஒரு மாணவனைக்கூட அதிற் காணமுடியாதவாறு, உற்சாகம் திமிர்ந்திருந்தது. "இந்தியா எனது தேசம், இந்தியர் எனது இரத்தச் சகோதரர், இவர்களெல்லாம் எம் நாட்டு மன்னர்கள்" என்று பாராயணம் பண்ணினர்கள். "நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்" என்று பிரதிக்ஞை எடுத்தார்கள். "பாரதத்தாயைப் பற்றிப் பிணித்திருக்கும் பராதின விலங்கைப், படீரென வெடிக்கச் செய்கிறோம்" என்று வீரங்கூறினர்கள். புனு நகரம், ராஜ துவேஷத்தின் விளைநிலமாயிற்று.

விநயகனுக்குச் சரித்திரத்தில் விசேஷமான விருப்பமிருந்தது. ஆங்கிலச்சரித்திராசிரியர்கள், அவர்கள் நோக்கம் போல் அவர்கள் காரியத்துக்கேற்றவாறு, உண்மையை மறைத்து ஒருதலைப்பட்சமாய் எழுதிய இடங்கள், இந்துதேச சரித்திரத்தில் விநயகனுக்கு வினயமாய்த்தட்டின. அந்தப் பிசகுகளை அவன் அதி நுட்பமாய் ஆராய்ச்சிசெய்து, அதற்குரிய ஆதாரங்களைச்சேகரித்து, இன்ன சம்பவம் இப்படியல்ல அப்படி நடந்தது என்று தோழர்களுக்குப் போதித்தான். இந்து தேசத்தின் பெருமை, இன்னும் பிரகாசமாய்ப் புலப்

பட்டது. எல்லா மாணவர்களும் கண்களைத் துடைத்துக் கொண்டு தேசத்தைக் காணத் தொடங்கினர்.

நாலு வருஷங்கள் பெர்கூஸன் காலேஜில் விநாயகன் பயின்றான். ஒரு தரமாவது பரீட்சையில் அவன் தவறிய தில்லை. நாற்பது வருஷங்களில் செய்ய வேண்டிய வேலையை, அந்த நாலு வருஷத்தில் அவன் செய்து முடித்தான். எல்லா மாணவர்களும் அவனை "அவதாரம்" என்று புகழ்ந்தனர்.

வாக்குவல்லபம், விநாயகனுக்கு நிறையவுண்டு. வார்த்தை கள், நெருப்புத் துண்டங்கள் போற் கொதிப்புக்கொண்டிருந் தன. ரூஸோவின் வார்த்தைகள்தான், பிரெஞ்சுப் புரட்சியை உண்டுபண்ணின என்று பாஸ்வெல் எழுதியதில் எவ்வளவு உண்மை யிருக்கிறது! வால்டேரின் வாக்குவர்ஷம், பிரான் ஸில் பிரளயத்தை உண்டுபண்ணிற்றென்று கர்னல் இங்கர் ஸால் எழுதுகிறான். இந்த இரண்டு சக்திகளும்—எழுத்தும் வாக்குமாகிற இரண்டு வல்லபங்கள்—விநாயகனிடம் இருந்தன. எதாவதொரு விஷயத்தை எழுதினாலும் சரி, பேசினாலும் சரி அதை அவன் நன்றாய்ச் சர்ச்சை செய்து, தர்க்க குதர்க்கங் களுக் கிடமில்லாமற் கையாளுவான்.

புனாவில், விநாயகன், எல்லோருக்குஞ் செல்லப்பிள்ளை யாகிவிட்டான். மாணவன் முதல், மேதாவிவரை, அனைவ ரும் அவனிடம் அன்பு காட்டினர். மகரிஷி திலகரும், மகா தேவ பரஞ்சிபியும் விநாயகனின் வீரத்துக்குந் தேசபக்திக்கும் வியந்தனர். *கேஸரியில் திலகரும், *காலனில் பரஞ்சிபியும்

---

* "கேஸரி" * "காலன்" } மகாராஷ்டிரத்தில் மகா பிரபலமானபத்திரிகைகள்.

சுதந்திரபேரிகை முழக்கினர்கள். அது ரெம்ப ஆரம்பகாலம். "தேசீய எண்ணமே இந்தியாவில் ஏற்படக்கூடாது. முளையி லேயே கிள்ளி எறியவேண்டும்" என்று, அரசாங்கம் அதி எச்சரிக்கை எடுத்துக்கொண் டிருந்தது. தேசபக்தனென்று ஒருவன் தலை நீட்டக்கூடாது. அப்பேர்ப்பட்ட அபாய காலத்தில், திலகரும் பரஞ்சிபியும், திவிர தேசியவாதிகளா யிருந்தனர். அவர்களோடு விநாயகன், தொடர்புவைக்கத் தொடங்கினன். அடிக்கடி அவர்களைச் சந்திப்பதும், விவா திப்பதும், அவனுக்கொரு வேலையாகிவிட்டது.

ஒரு கொள்கையைப் பிரசாரஞ் செய்து பரப்புவதற்குப் பத்திரிகை ஒரு பெரிய சாதனமாயிருக்கிறது. மாறுபட்ட அபிப்பிராயங்களுடைய தலைவர்களெல்லாம், தங்கள் தங்கள் கொள்கைகளைப் பரப்புவதற்குப் பத்திரிகைகளைக் கையில் வைத்துக்கொண் டிருந்தார்கள். இந்த ரகஸ்யம் விநாயகனுக் குந் தெரியும். அவனுக்கும் ஒரு பத்திரிகை வேண்டும் என் னும் ஆசையுமிருந்தது. கஷ்டமில்லாமற்—காசுபணச் செல வில்லாமல் ஒன்று ஆரம்பித்தான்—வாரப்பதிப்பு—ஞாயிறு தோறும் வெளிவருவது. "**விகாரி**" என்று அதன் பெயர். கையெழுத்துப்பிரதி.

"விகாரி" யில் வெளிவந்த கட்டுரைகளை எல்லாம், விநா யகன்பேனவே வரைந்தது. ஒரு பிரதி எழுதிக் கொடுத்து விட்டால், அதைப் பல நூறு பிரதிகளாய்ப் பெருக்குவது மாணவர்களுக்குப் பிரமாதமல்ல. இவ்வாறு எழுதப் பெற்ற பிரதிகள்; ஆயிரக்கணக்கில் சுற்றிப் பரவின. அச்சடிக்கப் பட்ட பத்திரிகைகளுக்கு மாற்றுப் பத்திரிகைகளாகவும், பரி

வர்த்தனை செய்யப்பட்டன. 'விகாரி'யில் வெளிவந்த கட்டுரைகளை, வேறு பத்திரிகைகளும் விருப்புடன் பிரசுரித்தன. அவற்றைப் படிக்கப் பொதுஜனங்கள் ஆவல்கொண்டனர்.

இதர சங்கங்களை இழுப்பதற்கு "விகாரி" ஒரு சுருக்குக் கயிறாகவும் இருந்தது. குஸ்திக்கழகம், சிலம்பக்கூடம், காலட்சேப சபை முதலிய ஸ்தாபனங்களுக்குள்ளும் "விகாரி" புகுந்து வேலை செய்தது.

மாணவர் கழகங்களெல்லாம், சவர்க்காரைச் சூழத் தொடங்கின. கலாசாலை மண்டபங்களில், சவர்க்காரின் வீரக் குரல், சிம்மகர்ஜனைபோல் எதிரொலித்தது. இத்தாலியாவில் நடந்த புரட்சியின் எழுவகைத் தத்துவங்களைச், சவர்க்கார் பேசும்போது, கேட்கிறவர்கள் உள்ளம் துடிக்கும்; உணர்வு கொதிக்கும். மராட்டி பாஷையின் சரளத்தைச் சவர்க்காரிடங் கேட்கவேண்டும். சுதந்திரத்தின் தூய்மையைச் சொற்பொழிவிற் காண்டல்வேண்டும். சகல சுகங்களோடும், இன்ப வேட்டையாடித் திரிகிற சொகுசு மாணவர்கள், தேநீர் விருந்துகளிலும் பந்தாட்டங்களிலும் பரம பிரியர்களாய் இருந்தபோது, சவர்க்கார் கோஷ்டி, தேசியசிருஷ்டிவேலையில் ஈடுபட்டிருந்தது.

புனுவுக்கு வெளியே—வெகுதூரத்தி லல்ல—சமீபத்தில் ஒரு காடு. அதில் சங்கரன் ஆலயம். அங்கு ஆதித்தவாரம் அந்திப்பொழுதில் அந்த மாணவர்கள் கூடுவதுண்டு. அது யாருக்குந் தெரியாது. எங்கோ வெளிக்குப் போவதுபோல் ஒவ்வொருவராய்ப் போய்க் கூடுவார்கள். சங்காரமூர்த்தியின் சந்நிதியில், சுதந்திரப் போருக்குவேண்டிய சூழ்ச்சிகளையெல்

லாஞ் செய்வார்கள். சவர்க்கார் சைன்யத்திற்குப் பெர்கூஸன், ஒரு பாசறையா யிருந்தாலும், சங்கர ஞலயந்தான் சுருங்கை (நிலவறை) யாயிருந்தது. சுதந்திரப்போரின் மூலமாகத்தான் அரசியல் விடுதலையாகிற பிரவேசச் சீட்டை அடையமுடியும் என்று அவர்கள் அபிப்பிராயப்பட்டனர். அதற்குப் பிரவேசக் கட்டணமாக, என்ன விலை வேண்டுமானுலும் அவர்கள் கொடுக்கத் தயார். "உயிர் வேண்டுமா ? தருகிறோம்" என்று மார் தட்டினர். சிவாஜியையும்; ராமதாஸையும்; மாஜினியையும், கரிபால்டியையும் அவர்கள் பின்பற்றினர். ஒரே விதமா யுடுத்துவதும், ஒரேவிதமான ஒழுங்குக்குங் கட்டுப்பாட்டுக்கும் உடன்படுவதுமாக அவர்கள் சரீரத்தாலும் மனத்தாலும் ஒன்றுபட் டிருந்தனர். "சிக்கனமாய் ஜீவிக்கவேண்டும், சுருசுருப்பாய்ப் படிக்கவேண்டும்; சுதேசியத்தை அனுஷ்டிக்கவேண்டும்" என்றெல்லாம் விநாயகன் தனது சிநேகர்களுக்குச் சொன்னுன். "உடலை வயிரமுடையதாக்குங்கள். உள்ளத்தை உறுதியுடையதாக்குங்கள்" என்றும் போதித்தான். குஸ்தி போடல்; சிலம்படித்தல்; கயிறு தாவுதல், அடித் தாண்டுதல் முதலியவைகளெல்லாம் அப்பியசிக்கப்பட்டன.

முந்தையர் செய்த வீரச் செயல்களை, விநாயகன், சகாக்களுக்குச் சொன்னபோது, அவர்களிருந்த இடங்களைப் போய்ப் பார்வையிடவேண்டும் என்றும் ஆசை துடித்தெழும். கட்டுச்சாதங் கட்டி எடுத்துக்கொண்டு கால்நடையாகச் சென்று காணுவார்கள். தாஞஜியின் நிரவீரச் செயல்களைக் குறிப்பதான * **சிங்காது** க்குச் சென்முர்கள். அங்கே அந்த மகா வீரனுடைய சூட்சுமத்தைச் சாட்சியாகவைத்து "நாங்க

ளும் அவனைப்போல் சாவோம்" என்று சபதமெடுத்தார்கள். தாய் நாட்டின்பொருட்டுச் சாவதற்குத் தைர்யத்தையும் சக்தியையும் தரும்படி வீரதேவதையை வணங்கினார்கள்.

---

## 6—சுதேசிக் கிளர்ச்சி.

வங்காளத்திலிருந்து ஒரு ஒலி வந்தது. அது இந்தியா முழுதிலும் அதிர்ந்தது. இமயமலையி லிடித்தது; குமரியுங் குலுங்கிற்று; பாஞ்சாலம் பதைத் தெழுந்தது. அதுதான் '**வந்தேமாதரம்!**'

"நமஸ்காரம் தாயே!" என்று நாங்கள் சொன்னால், எதிரிகள் ஏன் இப்படி நடுங்குகிறார்கள்? கௌமார மதத்தினர் (குமரக்கடவுளை வணங்குகிறவர்கள்) சடாட்சரத்தை மந்திரமாய் வைத்திருப்பதுபோல, இந்தியாவைப், பூமித் தெய்வமாய் வணங்குகிறவர்கள், வந்தேமாதரத்தைத் தேசியத் திருமந்திரமாய் உச்சரிக்கிறார்கள். இதுவென்ன அஞ்சத் தக்கதா? அல்லது, 'அட கெடுவாய்' என்று யாரையாவது சபிக்கிறதா? எங்கள் தாயை—எங்கள் நாட்டுத் தெய்வத்தை நாங்கள் வணங்குகிறோம். இது கூடாதா? இதுவுங் குற்றமா? உங்களைக் கேட்கிறேன்; குற்றந்தானா?

1905-ம் ஆண்டிலேதான், வந்தேமாதர மகம், இந்தியாவில் ஆரம்பமாயிற்று. அதைப் பிரதிஷ்டை செய்துவைத்த பெருமை, பங்கிம் சந்திர ரைச் சாருகிறது. பங்கிம் சந்திரர் வாழ்க!

1095-முதல் 06-ம் ஆண்டுவரை, இந்தியாவில் சுதேசியியக்கம் ஏக மும்முரமா யிருந்தது. ரோமேச சந்திர தத்தர், இந்தியப் பொருளாதாரச் சரித்திரத்தை (Economic History of India.) எழுதி வெளியிட்டதுதான் இந்தக் கிளர்ச்சிக்குக் காரணம். "பிரிட்டிஷ்காரர்கள், விற்றுப் பிழைத்து வியாபாரஞ் செய்வதற்காகத் தேச தேசங்களைத் தேடி, வர்த்தகக் கூட்டத்தாராகத்தான் இந்தியாவுக்கு வந்தார்கள்; இந்தியாவை ஜெயித்தார்கள்; இந்தியக் கைத்தொழிலை அழித்தார்கள். இந்தியாவில் இங்கிலாந்துச்சரக்குகளை விற்கத் தொடங்கினார்கள்" என்று அவர் சொன்னதுதான், சுதேசிக்கு அஸ்திவாரம். "ஜனங்கள் உள்நாட்டுப் பொருளை உபயோகிக்க வேண்டும்" என்று அவர் எழுதியதும், அதை வியாஜமாய் வைத்துக்கொண்டு, தலைவர்கள் ஜனங்களைத் தட்டியெழுப்ப ஆரம்பித்தனர். தனக்குவேண்டிய பொருள்களைத் தானே உற்பத்திசெய்து, தன் கால்களைக்கொண்டு தானே நிற்கக்கூடிய நிலைமைக்குத் தேசத்தைக் கொண்டுவந்து விட்டால், அப்புறம் தங்களுக்கு இங்கு வேலையில்லை என்று வெள்ளைக்காரர்கள் போய்விடுவார்கள். இங்கிலீஷ்காரரின் வயிற்றுச்சோறு, இந்தியாவிற் சமைக்கப்படுகிறது. இங்கே சோறில்லையானால், அங்கே அவர்கள் பட்டினி. இங்கே நமக்குச் சோறு வயிறுநிறைய வேண்டுமானால், அங்கே அவர்களையனுப்பிவிடவேண்டும். உள்நாட்டுக் கைத்தொழிலை உற்பத்திசெய்து, நாட்டுச் சரக்கு நாட்டிலேயே விற்பனையாகும்படி செய்யவேண்டும். இந்தியாவிலிருக்கிற முப்பத்தேழு கோடி மக்களும் சுதேசி விரதம் எடுத்துக்கொண்டு நிலைத்தார்களானால், இங்கு எந்த வல்லரசும் அதிகாரஞ் செலுத்தமுடியாது.

காந்திஜீயின் ஒத்துழையாமையில் இதுஒரு அம்ஸம். உங்கள் சரக்குகளை நாங்கள் வாங்கமாட்டோ மென்பது, ஒத்துழை யாமை யல்லவென்று யாரால் சொல்ல முடியும்? ஒருவித மாய்ப் பார்த்தால், 1905-ம் ஆண்டிலேயே ஒத்துழையாமை யியக்கம் ஆரம்பித்து விட்டதென்று சொல்லலாம். பதினாறு வருஷங்களுக்குப் பின்னர், உருப்படியான ஒத்துழையா மையை, இந்தியாவில், காந்திஜீ புகுத்தினார் என்பது, பழைய ஒத்துழையாமைக்குப், புத்துயிரும் புத்துருவும் அளித்தா ரென்றுதான் அர்த்தம். பழமையே புதுமை.

ஒத்துழையாமைக்குப், பஹிஷ்காரம் என்கிற பதமும் அர்த்தமாய் அமைகிறது. மணியும் ஒலியும்போலும், சுதேசி யும் பஹிஷ்காரமும் பிரிக்க முடியாதவாறு பின்னிக்கொண் டிருக்கின்றன. சுதேசி யணியவேண்டுமானால், விதேசியைப் பஹிஷ்கரித்துத்தா னாகவேண்டும். நீரிலிறங்காமல் நீந்த முடியுமா?

சுதேசி யியக்கம், இந்த ஈராண்டுகளிலும், இந்தியாவில் இராட்சச வேகத்திற் பரவியது. தென்னாட்டிலேதான் அது அதிதீவிரமாய்க் கொழுந்துவிட் டெரிந்தது. அதனை ஊதி விட்டவர் தூத்துக்குடிச் சிதம்பரம்பிள்ளை. "கப்பலோட்டுவது முதல் எல்லாத் தொழிலையும் இந்தியரே செய்யவேண்டும்" என்று அவர் சொன்னார். அவர் நல்ல தியாகி! கர்ம வீரன்!! அவர் வாக்கு, தமிழ்நாடு முழுமையையும் தட்டியெழுப்பிற்று. கவியரசன் சுப்பிரமண்ய பாரதியைத், தேசியத் திருக்கவி யாய்த் திருப்பியதும், அந்த வீரவாக்குத்தான். திருநெல் வேலிக் கலெக்டர்—ஆஷ் துரையை, மணியாச்சியிற் சுட்டுத்

தள்ளுந் துணிச்சலே, வாஞ்சி ஐயருக்கு அளித்ததும், அந்த வீர சக்திதான். இன்றுவரை, இனி என்றும் அவர் செய்த சுதேசிக் கிளர்ச்சியைத், தமிழகம் மறக்கவே மறக்காது. தமிழ் நாட்டார், தேச விடுதலைக்காகச் செய்த முதற் கிளர்ச்சியும் அதுதான்.

இந்தச் சுதேசி யாகத்தில், சவர்க்காரும் சகாக்களும் இறங்கினர்கள். உண்மையில் இவ் வேள்வியை நடத்துகிறவர்கள், தலைவர்களா யிருந்தாலும், ஜனங்கள் அவிப்பாகம் பெய்யாதவரை, அது அகில தேசப் பிரச்னையாக முடியாது. ஜனங்களை அவி பெய்யும்படி செய்வதற்குப் பிரசாரம் வேண்டும். புனு, நாஸிகை முதலிய நகரங்களில், சுதேசியைப் பிரசாரம் செய்வதற்குப், பிரசாரகோஷ்டிகளைச் சவர்க்கார் சிருஷ்டித்தார். கோடை விடுமுறை காலங்களில், இது கையாளப் பட்டது. ஒரேநாளில், நாலைந்து மேடைகளிற்கூட விநாயகன் பேசி யிருக்கிறுன். அவன் வெறும் வார்த்தைகளைப் பேசினனு? கவிகளைப்போல் கற்பனைகளை அடுக்கிக்கொண்டிருந்தானு? அல்லது, ஜனங்களைக் குறையிரந்து கெஞ்சிக் கேட்டுக் கொண்டானு? “ஒன்றைச் செய்யவேண்டும்; அவசியம் செய்யவேண்டும்” என்று சேனுபதிக்குரிய தலையெடுப்பில் அவன் கட்டளையிட்டான். அக்கினித் துண்டங்கள் போன்ற வார்த்தைகளால், பரதேசியைச் சுட்டுச் சாம்பலாக்குங்கள்என்று அவன் சொன்னபோது, நிஜமாகவே ஜனங்கள் மனதில், சுதந்திரச் சுடர் கொழுந்துவிட் டெரிந்தது! “**இந்தியா நமது தேசம்; இந்தியர்களெல்லாம் சுதேசிகள், சுதேசிப் பொருள்களைத்தான் இந்தியர் உபயோகித்தல் வேண்டும்**” என்னும்போது, இயற்கையிலேயே அவர்களுக்கு

விதேசியில் வெறுப்புத் தட்டிற்று. பிடாரனுடைய மகுடிச் சத்தத்தைக் கேட்ட கிருஷ்ண சர்ப்பத்தைப் போலும், சண்ட மாருதத்தைக் கண்ட சமுத்திர அலைகளைப்போலும், தம்பட்டத்தைக்கேட்ட சிங்கத்தைப் போலும் அந்த ஜனங்கள், ஆக்ரோஷங்கொண்டு எழுந்தார்கள். அவர்கள் மனத்தில், தான் வைத்த தீ, பற்றிக்கொண்ட தென்பதை விநாயகன் வினயமாயுணர்ந்தான்.

“வேள்வி வளருங்கள்! அவிபெய்ய அனைவரும் தயார். அந்நியத்துணியை அள்ளியிடுவோ”மென்று சவர்க்கார் சாற்றினான். மகாதிலகருக்கு அது ஆரம்பத்தில் ஒவ்வவில்லை. “ஏழை ஜனங்கள், அவர்கள் வைத்திருக்கிற ஒன்றிரண்டு துணிகளை அவர்கள் இழக்கத் துணியாவிட்டால், எப்படி யாகம் பூர்த்தியாகும்? அப்போது, நமது நிலைமை ரெம்பக் கேவலமானதாகிவிடாதா? நம்மை ஜனங்கள் பின்பற்றவில்லை என்று, எதிரிகள் ஸ்பஷ்டமாகத் தெரிந்துகொள்ள மாட்டார்களா? நமக்கு மக்கள் மத்தியிலே செல்வாக்கில்லை என்பதை இவ்வளவு தெளிவாகவா காட்டிக்கொள்வது?” என்றெல்லாம் மகரிஷி திலகர் மனவாதைப்பட்டார். விநாயகனுக்கு மக்களிடம் பூரண நம்பிக்கையிருந்தது. “நிச்சயமாய் அவர்கள் நம்மைக் கைவிடமாட்டார்கள்” என்றான் சவர்க்கார்.

இக் காவிய நாயகன், “காலன்” பத்திரிகாசிரியர்—சிவராமமகாதேவ பரஞ்சிபியை அழைத்தான். “போதிய அளவுக்குப் பரதேசித் துணிகள் கிடைத்ததானால் நிமூட்டுகிறேன்” என்று அவர் பிராக்கெட் (நிபந்தனை) போட்டுப் பேசினார். அதனை விநாயகன் ஒப்புக்கொண்டான். அவ்வளவுதான்.

ஜெயித்த நகரத்தைக் கொள்ளையடிக்கச் செல்லும் சிப்பாயிகளைப்போல், மாணவர்கள் பனு நகரத்துக்குள்ளே பிரவேசித்தனர். மொட்டை வண்டியில் நின்றுகொண்டு, தெருத்தெருவாய் விநாயகன் பிரசங்கவர்ஷம் பெய்துகொண்டு போனன். பரதேசித் துணிகள் வண்டியில்வந்து குவிந்துவிட்டன. மாடுகள் இழுக்கமுடியாத பாரம் வண்டியி லேறிவிட்டது. விநாயகன், அதற்குள் புதைந்துவிடுவான்போலு மிருந்தது. வேறு வண்டியொன்று கொண்டுவரப்பட்டது. அதுவும் பூர்த்தியாகிவிட்டது. அப்புறமொரு வண்டி. இப்படியாக, எத்தனையோ வண்டிகள், சத்த வண்டிகளைப்போல் சாரைசாரையாய்த் தெருக்களிற் சாரியடித்தன. ரீயே மார்க்கட்டிலிருந்து லக்டிப்பூல் (மரவாராவதி) வரை, உற்சாக ஊர்வலம், இரையுண்ட நாகம்போல் நகர்ந்தது. வீட்டில் வீற்றிருந்து ஆவலோடு செய்திக்குக் காத்துக்கொண்டிருந்த லோகமான்யருக்குச், சமாச்சாரம், பரதேசித் தபாலிற் கிடைத்தது. பாய்ந்தோடினர். விநாயகனைக் கட்டிப்பிடித்தார். "நீ வீரன்" என்றார். அப்புறமென்ன கேட்கவேண்டுமா? தக்கன் யாகத்தைவிட, சவர்க்கார் யாகம் பெரிதாகிவிட்டது. மேகமண்டலம் வரை சுருள்சுருளாய்ப் பரதேசிப் புகை படர்ந்து சென்றது. துரியோதனன் சபையில், பாஞ்சாலி (துரோபதை) யிடமிருந்து, துச்சாதன னுரிந்த துகிலை யெல்லாம், சேவகர்கள், அள்ளியள்ளிக் கடத்தி அயர்ந்ததுபோல், திலகரும் பரஞ்சிபியும், பரதேசத் துணிகளை அந்த யாக குண்டத்தில் அள்ளிப் போட்டுப் போட்டு அலுத்துப் போயினர். "விதேசித் துணியை யிங்கு நாம் எரிக்கவில்லை; விதேசி எண்ணத்தை எரிக்கிறோம்! விதேசியை எரிக்கிறோம்! அங்

நிய ஆட்சியில் நமக்கிருந்த மோகத்தைக் கொல்லுகிறோம்! அந்நியருக்கும் நமக்குமிருக்கிற தொடர்பைச் சுடுகிறோம்! சுய ராஜ்யத்தைத் தொழுகிறோம்!" என்று விநாயகன் விளம்பியதும், மராட்டியர்கள் தோள்தட்டினார்கள்; ஆரவாரித்தார்கள்.

பரஞ்சிபி, குவியலிலிருந்து ஒரு கோட்டை எடுத்தார். அதன் சிறிய பைகளை (ஜேபி) ஜனங்களுக்குக் காட்டினார். "இதோ பாருங்கள்! இந்தச் சிறு பைகளின் வழியாகத்தான், இந்தியச் செல்வம் இங்கிலாந்துக்குப் போகிறது. இந்திய மன்னர்களின் மணிமகுடங்களும், இதன் வழியாகத்தான் எடுத்துச் செல்லப்பட்டன. ஹே நாசகாலப் பைகளே! உங்களின் ஒழிக்குந் திறமையை உணர்ந்துவிட்டோம். உங்களை ஒழிக்கும் உபாயத்தையும் ஓர்ந்துகொண்டோம். நீங்கள், உங்களுக்குள்ளே, இந்தியச் செல்வத்தை மாத்திரம் அடைத்துக்கொண்டிருக்கவில்லை. இந்திய இரத்தத்தையும் அடைத்துக்கொண் டிருக்கிறீர்கள். ஏ நெருப்பே! இவைகளைச் சுட்டுச் சாம்பலாக்கு! நாங்கள் இதுவரை அடிமைகளாய்—விலங்கடிமைகளா யிருந்த பாவத்தையும் சுட்டுச் சாம்பலாக்கு" என்று கர்ஜித்தார்.

இதுதான் இந்தியாவிற் செய்யப்பட்ட முதல் யாகம். இதைப்பற்றிப் பத்திரிகைகளெல்லாம் பத்திபத்தியாய் எழுதத் தொடங்கின. பானர்ஜியின் "பங்காளி" (பத்திரிகை) யும், மோதிலால்கோஷின் "அமிர்தபஜா"ரும் வங்காளத்தில் தீ மூட்டத் தொடங்கின. பின்னர் நிகழ்ந்த பிரிவினைக் கிளர்ச்சிக்கு இது தூபதீபமாயிற்று.

மிதவாதிகளும், மிதவாதப் பத்திரிகைகளும் ரூபா அணா பைஸாவில் கணக்குப்போட்டார்கள். எரிக்கப்பட்ட துணிகள், இந்தியாவின் நஷ்டமென்று அவர்கள் சொன்னதில், அறியாமை பட்டவர்த்தனப்பட்டது. சுதேசியின் சுத்த தத்துவத்தை அவர்கள் அறியவில்லை. துனிப் புல் மேய்ச்சலாய்த் திலகரையும், பரஞ்சிபியையுஞ், சவர்க்காரையுங் குறைகூறினார்கள்.

ஆங்கிலப் பத்திரிகைகள், "ஆ ஹா ஹா"வென்று ஆர்ப்பரித்தன. சவர்க்காரைத் தின்னச் சினமாய்த் திட்டின. அதன் எதிரொலி, கலாசாலைச் சுவர்களிலுந் தாக்கிற்று. அப்போது, பெர்கூஸன் காலேஜ் பிரின்ஸிபாலா யிருந்த டாக்டர் ஆர். பி. பரஞ்சிபியும் ஆத்திரப்பட்டார். ஹாஸ்டலிலிருந்து விநாயகனை அகற்றிவிட்டார். பத்து ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது. தேசீயத்தின் முதற்பரிசும், முதற்பட்டமும் முதன் முதலாவதாகப்பெற்றான்.

இருபத்துநாலு மணி நேரங்களில் இவற்றைச் செய்ய வேண்டுமென்பது கட்டளை. விநாயகன் ஏழையா யிருக்கலாம். வேறிடம் தங்குவதற் கில்லாதவனாகவு மிருக்கலாம் நாடு சின்னதா? நாட்டில் அவனுக்குக் காணியிடங் கிடைக்காதா? காலேஜ் அதிகாரிகள், கையோங்கிய காரியஞ் செய்துவிட்டார்க ளென்று, மஹாராஷ்டிரத் தேசியப் பத்திரிகைக ளெல்லாங் கண்டகண்டபடி கண்டித்தன. திலகரின் "கேஸரி," ஒருவாரம் வரை குமுறிற்று. கண்டனக் கூட்டமுங், கண்டகண்ட இடங்களிலெல்லாங் கூடின. நாஸிகையிலும், இதர நகரங்களிலும், இந்தக் கூச்சல் அதிர்ந்துகொண்

டிருந்தது. பத்து ரூபாய்தானே! சவர்க்காரே கட்டிவிடட்டும்! அல்லது வேறு யாராவது கட்டிவிட்டாற் போகிறது! என்றெண்ணிற்று மகாராஷ்டிரம்? ஆயிரமும் அபராதந்தான், அரைக் காசும் அபராதந்தான் என்று நாடு நினைத்தது. நிதி திரட்டினார்கள். எதற்கு? சவர்க்காரின் பத்து ரூபாய் அபராதத்தைக் கட்டுவதற்கு. அதுதான் பிரசித்தி பெற்ற "பைஸா நிதி". ஒவ்வொரு பைஸாவாய் வசூலிக்கப்பட்ட பைஸா நிதி, பல்லாயிரமாகப் பெருகிவிட்டது. பத்து ரூபா போகப் பாக்கியைச், சவர்க்கார், கைத்தொழில் நிதியில் சேர்த்துவிட்டான்.

அப்போது விநாயகன், பீ. ஏ., இரண்டாம் (ஸீனியர்) வகுப்பிற் படித்துக்கொண் டிருந்தான். பரிட்சை சமீபித்திருந்தது. கலாசாலை அதிகாரிகளின் கோபத்துக்கோ எல்லையில்லை. பள்ளிப்பாடங்களையும், பஹிஷ்காரப் பிரசாரங்களையும் ஏக காலத்தில் எப்படிச் செய்வது? பரிட்சையில் தேற முடியுமா என்று சகாக்களெல்லாரும் சந்தேகப்பட்டார்கள். ஆசிரியர்களும், அதிகாரிகளும் பரிட்சை எழுதவிடாமல் தடுத்துவிடுவதென்றுகூடத் தீர்மானித்தனர். அப்படிச் செய்வது, அவனை அதி தூரத்துக்குத் தூக்கிவிட்டதாகிவிடும், என்று அதிலொருவர் ஆலோசனை சொன்னார். பிரபல மிதவாதப் பத்திரிகையான "இந்து பிரகாஷ்" இதைப்பற்றி எழுதும்போது, மாணவர்களைத் தவறான வழியில் வேண்டுமானால், சவர்க்கார் அழைத்துச் சென்றிருக்கலாம். அதி தீவிரமான புரட்சியைப் போதிக்கக்கூடிய விஷநாக்கும், வசனவிச் சொற்களும் விநாயகனிடமில்லை" என்று சொல்லிற்று.

பரிட்சைக்கு அனுமதிக்கப்பட்டான். 1905-ம் ஆண்டில் அவன் பி. ஏ., பரிட்சையில் முதல் தரமாகத் தேறினன். கலாசாலைப் படிப்பிலிருந்து அவன் படிப்பு முடிந்தது. நாஸிகையில் 1900-த்தில் ஆரம்பிக்கப்பட்ட "மித்திர மேளம்" இப்பொழுது, மஹாராஷ்டிரத்தில், எங்கெங் கெல்லாமோ கிளை வெடித்திருக்கிறது. அவைகளை எல்லாம் ஒன்றுசேர்த்து உருப்படியாய் ஒரு சபையை உண்டாக்க வேண்டுமென்று விநாயகன் எண்ணினன். அதைப் பகிரங்கத்திற் செய்யமுடியுமென்று அவனுக்குத் தோன்றவில்லை. விதேசி தகனத்திலிருந்து, அரசாங்கம், அவனையும், அவ்ன் அலுவல்களையும் கண்குத்திப் பாம்புபோற் பார்த்துக்கொண் டிருக்கிறது. எப்போது எவ்வழியில் மடக்கி, இவனைச் சிறைப்படுத்தலாமென்றுங் காத்துக்கொண் டிருக்கிறது. ஒரு ரகஸிய சபையைக் கூட்டி, அதற்குத் தேசத்தின் பல பாகங்களிலிருந்தும் பிரதிநிதிகளை வரவழைப்பதென்று திட்டம்போட்டான். அதுதான் "**அபிநவ பாரதத்**" துக்கு அஸ்திவாரம்.

புனவுக்கு வெளியே * **கல்யாண்** குகைகளில் ஒன்றில், இருநூற்றுவர் — எல்லோரும் மஹாராஷ்டிரர்கள் — இளமைமாருத வீரர்கள் கூடினர்கள். தசரதன் செய்ததுபோன்ற புத்திரகாமேஷ்டியோ—தர்மன் செய்ததுபோன்ற அஸ்வமேதமோ, ஏதோ ஒரு பெரிய யாகஞ் செய்வதற்காகக் கூடியிருப்பவர்களைப்போல், தலை யெடுப்பும் சந்தோஷமும் தழைத்திருந்தனர். சம்பிரதாய ரீதியாய், அந்தச் சம்மேளனத்தைக் கூட்டி வைக்கிறவனன சவர்க்கார், பிரதிநிதிகளைக், கல்யாணத்துக்கு

* கல்யாண்—புனவுக்கடுத்துள்ள மலைக் குகைகள்.

வரும் உறவினரை வரவேற்கும் பெற்றோரைப்போல் வரவேற்ருன். அனேகருக்கு அவன் அதி இளமையைக் காண ஆச்சர்யமாயிருந்தது.

மகாநாடு ஆரம்பமாயிற்று. மாதாவைப் பாடினார்கள். அவளுக்கு ஆரம் சூட்டினார்கள். அட்சதையை அவரவர் தலையிலே போட்டுக்கொண்டனர். விநாயகன்தான் பூசாரி. திருமந்திரம் ஜெபிக்குந் தெய்வ பக்தர்களைப்போல், விநாயகன் தேசபக்த மந்திரத்தை ஜெபித்தான். வார்த்தை வார்த்தையாய்ப் பிரதிநிதிகளும் பின் தொடர்ந்து சொன்னார்கள். "மாதாவின் பொருட்டு, மாதாவின் திருப்பணியிலே இதோ நாங்கள் எங்களைச் சமர்ப்பிக்கிறோம். எங்களுடைய சொத்துச் சுகங்களும் அவளுக்கே அர்ப்பணிக்கப்படுகிறது. சிவாஜியைப் போலும், பாஜியைப் போலும், மாஜினியைப்போலும், காஸத்தைப் போலும், நாங்களும், எங்களை உனக்காக—உன் பொருட்டு—உன் பணியில்—உன் பாதத்திற் பலிகொடுக்கத் தயாராயிருக்கிறோம்." என்று சபதமெடுத்தார்கள். விநாயகன், இனிமேற் செய்யவேண்டிய வேலையை விளக்கமாகக் கூறினன். மஹாராஷ்டிர முழுமையும் அமராத அமரஜோதியை உண்டுபண்ணி, அதிலிருந்து திவர்த்திகளைக் கொளுத்தி அடுத்த மாகாணங்களிலும், அகில இந்தியாவிலும் அமரஜோதியை உண்டாக்குவோம் என்று தீர்மானித்தார்கள். அதுதான், இணைக்கப்பட்ட—பல சபைகள் சேர்ந்த—"அபிநவ பாரதம்" அல்லது "எழுச்சியுற்ற இளம் இந்தியா" என்னும் சங்கமாகும். இப்பெயர், மாஜினியின் "இளம் இத்தாலி" என்னும் சமாஜத்திலிருந்து இரவல் வாங்கப்பட்டதென்றும், முழுதும் புரட்சிக் கொள்கைகளை யுடையதென்

றும், பின்னர் போலீஸார் தங்களுடைய குற்றச்சாட்டில் குறிப்பிட்டனர்.

அன்று, அங்குக் கூடியிருந்த பிரதிநிதிகள், சவர்க்காருக்குச் செய்துகொடுத்த சத்தியத்திலிருந்து பிசகவில்லை. 1909-ம் ஆண்டு டிஸம்பர் 21-ம் தேதி ஜாக்ஸன் கொல்லப்பட்டதுவரை, அபிநவ பாரதத்தின் நடவடிக்கைகள் அதி ரகஸியமாயிருந்தன. போலீஸால் நடவடிக்கை எடுத்துக் கொள்ள இயலாதவாறு அவ்வளவு பத்திரமாய் வேலை நடந்தது. மூன்று வருஷங்களுக்குப்பின், காஷிகார் கைதி செய்யப்பட்டபோது, அவரிடமிருந் தகப்பட்ட தஸ்தாவேஜ் களிலிருந்துதான், அப்படியொரு சபை யிருப்பதாய் அரசாங்க மறிந்தது.

1906-ம் ஆண்டு நவம்பரிலோ, டிஸம்பரிலோ ஆரம்பிக்கப்பட்ட அபிநவபாரதத்தின் மகாநாடுகள், 1907 ஏப்ரலில் நாஸிகையை அடுத்த கோதுராவிலும், அக்டோபரில் பம்பாயை அடுத்த ஸியோனிலும், 1908 ஏப்ரலில் நாஸிகையிலுங் கூடிச்செய்த தீர்மானங்களைக், காஷிகாரிடமிருந்து கைப்பற்றிய தஸ்தாவேஜ்களிற் கண்டபோதுதான், அரசாங்கம் அகலமாகக் கண்களைத் திறந்து பார்க்க ஆரம்பித்தது.

அபிநவ பாரதத்தின் ஆரம்பம், அதன் பிரதிநிதிகளால், அகில மஹாராஷ்டிரத்துக்கும் எடுத்துச் செல்லப்பட்டிருந்தாலும், சவர்க்கார் சும்மா இருக்கவில்லை. பிரயாணப் பிரசங்கங்களுக்கு ஏற்பாடு செய்தார். வாக்குவன்மை வாய்ந்த சில வாலிபர்கள், பயணத்துக்கு வேண்டிய துணிமணிகளைச் சுருட்டி எடுத்துக்கொண்டு சவர்க்காரைத் தொடர்ந்தனர்.

சிங்கதன், பாஜி முதலிய வீரர்களைப் புகழ்ந்து கூறும் பாடல்களைப் பாடிக்கொண்டு, தேசியச் சாரணர்களாய்த், தெருத் தெருவாய்க், கிராமங் கிராமமாய், நகரம்நகரமாய் அந்தச்சிறு கூட்டஞ் செய்த பிரசாரம், மஹாராஷ்டிரத்தில் நல்ல உணர்ச்சியை ஊட்டிற்று. கோவிந்தனுடைய கவிதைகளைக் கேட்டால், மயிர் சிலிர்க்கும். சவர்க்காருடைய சாகித்தியங்கள், ஜெயலெட்சுமியின் தடந்தோளிலிருந்து வெளிப்பட்ட வீர சக்தியைப்போல் மிளிரும். சொல்லப்போனால், அவர்கள் ஒரு பஜனைக் கோஷ்டியைப்போன் றிருந்தார்கள். அவர்கள் பாடிய தேசபக்த கீதங்களும், நாட்டுப் பாட்டுகளும் மஹாராஷ்டிரக் காற்றில் இன்றும் கலந்து ஒலிக்கின்றன! அவைகள் மகா வீரந்ததும்பியவை. அவைகளை அரசாங்கம் பின்னர்ப் பறிமுதல் செய்துவிட்டது. மஹாராஷ்டிரர்களின் மனத்திற் பதிந்திருக்கிறதே அதை யெப்படிப் பறிக்கமுடியும்?

பிரயாணமுடிந்து ஊருக்குத் திரும்பியதும், சவர்க்காருக்குச் சட்ட கலாசாலையில் சேர்ந்து படிக்க எண்ணமேற்பட்டது. அப்போது எஸ். ஆர். ராணுஜீயின் சகாய நிதிகளைப் பற்றிய சமாசாரம், லண்டனத்தனை தூரத்திலிருந்து வந்தது. அது கிடைத்துவிட்டதானல் லண்டனுக்குப் போய் பாரிஸ்டர் படிப்பதுடன், பிரிட்டிஷ்காரர்களின் பலம், அவர்கள் நாட்டில் எவ்வளவிருக்கிறதென்பதைக் காணவுங் காணலாமென்று கருதினன். இந்த எண்ணத்தைத் திலகரிடந் தெரிவித்தான்.

ஜாதிய சம்பிரதாயப்படி, விநாயகனுக்கு விவாகம் நடந்து முடிந்துவிட்டது. ஜாவார் சமஸ்தானத்தில் கார்வாரியா

யிருந்த சிபலங்கரின் சிரேஷ்ட குமாரியைக் கட்டியிருந்தார். சிறு பெண். பால்ய விவாகம். சிபலங்கரும், விநாயகனு டைய பாரிஸ்டர்ப் படிப்புக்குப் பண உதவி செய்வதாகச் சொன்னார்.

ஸாமாஜி கிருஷ்ணவர்மா "இந்திய சமதர்மி" என்னும் பத்திரிகையை லண்டனில் நடத்தினார். அதன் 1905 டிசம் பர் இதழில் ஒரு நிருபம் பிரசுரமாயிருந்தது. அது பாரிஸி லிருந்து, * எஸ். ஆர். ராணாவால், ஸாமாஜிக்கு அனுப்பப் பட்டது. பின்வருமாறு:—

பாரிஸ், 12 நவம்பர் 1905.

எனதன்பார்ந்த திரு. ஸாமாஜி கிருஷ்ணவர்மா அவர்களே!

ஒவ்வொன்றும், இரண்டாயிரம் ரூபாய்கள் பெறுமான முள்ள, மூன்று மாணவ சகாய நிதிகள், அடுத்த ஆண்டி லிருந்து வழங்குவதென்று நினைத்திருக்கிறேன். அவற்றிற் குரிய நிபந்தனைகளையும் சட்டதிட்டங்களையும் பின்னர் நீங்க ளும் நானுமா யிருந்து நிர்ணயஞ் செய்வோம்.

மீவார மகாராணா பிரதாப சிம்மனின் பேரால் ஒன்று அளிக்கப்படும். இன்னொன்று, மராட்டிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த சிவாஜியின் பெயரால். மற்றொன்று, மகாகவியாக வும், மகா தத்துவஞானியாகவும், மகா ராஜாதிராஜனாகவும் இருந்த அக்பர் மகா சக்கிரவர்த்தியின் பெயரால்.

* எஸ். ஆர். ராணா என்பவர், ராஜீயக் குற்றத்துக்காக இந்தியாவி லிருந்து நாடு கடத்தப்பட்ட ரஜபுத்திரர். இவர் பாரீஸில் வயிர வர்த்தகம் செய்கிறார். தேசாபிமானிகளுக்கு இவர் வீடு அங்கு அன்ன சத்திரமாயிருக்கிறது.

இம் மூன்று மாணவ சகாய நிதிகளையும், நான் ஏன் ஏற்படுத்த முன் வந்தேனென்று நீங்கள் ஆச்சர்யமடையலாம். நான், எனது இந்திய நண்பர்களின் பண உதவியினாலேதான் படித்து, இவ்வளவு தூரம் மேன்மைக்கு வந்தேன். அதற்குக் கைமாறாக என்னால் எதுவொன்றும் பிரமாதமாகச் செய்ய முடியாவிட்டாலும், வருஷத்தில் மூன்று இந்திய மாணவர்களையாவது, சுதந்திர நாடுகளைச் சுற்றிப்பார்த்துச் சுதந்திரத்தை அனுபவித்து, அதன்மூலம் இந்தியாவின் சுதந்திரத்துக்குப் பாடுபடக்கூடிய உணர்ச்சியை உண்டாக்கலா மென்பதுதான் என் நோக்கம்.

இப்படிக்குத் தங்கள்

அன்பார்ந்த,

**எஸ். ஆர். ராணா.**

இக் கடிதத்தைக் கண்டதுந்தான் சவர்க்கார், இங்கிலாந்து செல்ல எண்ணமுற்றான். திலகருக்கு இதைக் காட்டியதும், அவர், தமது நண்பரான சாமாஜி கிருஷ்ணவர்மாவுக்குப் பின்வருமாறு நிருபமெழுதினார்:—

கேஸரி காரியாலயம்,

புனா நகரம், 16 மார்ச் 1906.

அன்பார்ந்த பண்டித ஸாமாஜீ!

ராணாஜீயின் மாணவ சகாய நிதிகளுக்கு, மனுக்கள் நூற்றைம்பது வந்திருப்பதாக, திரு. கேரின் மூலமாய்க் கேள்விப்பட்டு ஆச்சர்ய மடைந்தேன். அவற்றிற்கு இவ்வளவு கிராக்கி யிருக்கும்போது, நான் ஒருவரைச் சிபார்ஸு செய்வது ஒருக்கால் பயனற்றதாகிவிடலாம். என்னைப் பொறுத்

தல்ல எனது ஆளைப் பொறுத்து, நீதி வழங்கப்படவேண்டும். சவர்க்கார் சுருசுருப்பான தேசியச் சிறுவன். சென்ற வருஷத்திலேதான் பீ. ஏ.,யில் தேறினுன். சுதேசிக் கிளர்ச்சியில் எங்களையெல்லாம் எடுத்தெறிந்துவிட்டான். பள்ளிப் பிரஷ்டனுனுன். பத்து ரூபாய் அபராதியுமானுன். சர்க்கார் உத்தியோக மென்ருல் உள்ளக் கசப்புள்ளவன். உயர்ந்த குணம். ஒழுங்கான நடத்தை. உன்னத லட்சியங்கள். இவைகளெல்லாம் இவனிடமிருக்கின்றன.

இப்படிக்குத் தங்கள் உண்மையான,

**பாலகங்காதர திலகன்.**

சாமாஜிக்குக் கிடைத்த 151 மனுக்களிலும் விநாயகனுடைய மனுவும், திலகருடைய சிபார்ஸும் அவரை அதிகம் கவர்ந்தன. சரியென்று சொல்லிவிட்டார். சவர்க்காருக்குச் சிவாஜிநிதி வழங்கப்பட்டது.

இவ்வளவில் சர்க்கார் ஜாபிதாவில், சவர்க்கார், முதல் வரியிலிருந்தான். பிரசங்கங்களையும் நடபடிக்கைகளையும், கண்ணில் திரிபோட்டுக்கொண்டு கவனித்து வந்தார்கள். நாஸிகைப் பிரசங்கமொன்றில் நல்லபிடி கிடைத்துவிட்டதென்று நாக்குச் சொட்டினுர்கள். கைது செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் சர்க்கார் தரப்பில் ஜரூராய் நடந்தது. இது சவர்க்காருக்குந் தெரியும். சகாக்களும் அறிவார்கள். திலகருக்குந் தெரியும். இங்கிலாந்து புறப்படுவதற்கு முன்னுல், எங்கே கைது செய்துவிடுவார்களோ என்று எல்லோரும் அஞ்சினர்.

இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களிலேதான் சர்க்காரின் மூளை சரியாய் வேலைசெய்வதுண்டு. சவர்க்கார், இங்கிலாந்து செல்லத் தயாராயிருக்கிறான். அங்கேபோய்ப் பிரிட்டானியாவின்வன்மையைக்கண்டு இவன் ஒருக்கால் பயந்துவிடக்கூடும். அல்லது ஆங்கில நாகரீகத்தில் அப்படியே லகித்து விட்டாலும் விடலாம். இதனிடையில், இப்போதேன் இவனைக் கைது செய்து, பெரிய தேசியவாதியாகவும் அரசாங்கத்தின் வலிய விரோதியாகவுஞ் செய்துகொள்ளவேண்டும் என்று சிந்தித்தார்கள். பாரிஸ்டராகப் படித்துவிட்டுப் பணஞ்சம்பாதிக்குந் துறையிலே ஒருத்தரம் சவர்க்கார் இறங்கிவிட்டால், அப்புறம் தேச மாவது; மண்ணாங்கட்டியாவது என்றும் அம்மூளை கணக்குப் போட்டது.

சர்க்கார் இப்படி எண்ணிக்கொண்டிருக்கையில், சவர்க்கார் என்ன நினைத்தான் தெரியுமா? "மஹாராஷ்டிர மாணவர்களை பெர்கூஸன் காலேஜில், பாரதமாதாவின் பணியில் திருப்பியதேபோல், இங்கிலாந்தில் ஐ. ஸி. எஸ்., பாரிஸ்டர், டாக்டர் முதலிய பரீட்சைகளுக்குச் செல்லும் இந்திய மாணவர்களையும் இந்தியாவின் பணியில் திருப்புகிறேனென்றான். அங்கே அவர்களுக்குப் புரட்சிப்பாடங்களைப் போதித்து விட்டால், படிப்பு முடிந்து பாரத தேசத்தின் பல பாகங்களுக்குஞ் சென்று உத்தியோகஞ் செய்யும்போது, அவர்கள் ஆங்காங்கு ரகஸியத்தில் அபிநவபாரத்தை ஸ்தாபிப்பார்கள். எதிரிகளின் வலிய கோட்டைக்குள்ளே நான் செல்லும்படியான சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது, தேசத்தின் அதிர்ஷ்டம்! மேலும் ருஷியப் புரட்சிக்காரர்களோடு பழகி வெடிகுண்டு செய்தல் துப்பாக்கி யிறக்குமதியாக்கல், முதலிய துணிகரச் செயல்களையுஞ் செய்யலாம்" என்றும் தன் சகாக்களுக்குச் சவர்க்கார் சொன்னான்.

இச் சந்தர்ப்பத்தில் இன்னொரு சம்பவம் நிகழ்ந்தது. அது அத்தனை முக்கியமானதல்ல— தள்ளிவிடலாம். சர்க்காரின் முட்டாள் தனத்திற்குக் கிரீடம் சூட்டுவதாயிருந்தால்?

ஒரு சாது; அகாமியயோகி என்று பெயர். அவர் மஹாராஷ்டிரத்துக்கு வந்தார். அவருக்கு மஹாராஷ்டிர முழுதும் நல்ல பெயராயிருந்தது. துறவியே யானாலும், தேசியப் பற்றுடையவர் என்பதுதான் அப்பேருக்குக் காரணம். தேசியத்தின் தீவிர தத்துவங்களை, அவர் போதித்தபோது, எல்லோரும் மூக்கின்மீது விரலை வைத்தார்கள். புனாவில்தான் அவர் அதிககாலந் தங்கியிருந்தார். மாணவர்கள், தனிமையில் தன்னிடம் வந்தால், ஒரு பெரிய ரகஸ்யத்தைச் சொல்லுவதாய்க்கூறினர். அப்போது விநாயகன் பம்பாயிலிருந்தான். உடனே புனா வந்து சேரும்படி அவனுக்குத் தந்தி பறந்தது. அலறிப்புடைத்துக்கொண்டு ஓடிவந்தான். அகாமியயோகியை அணுகினான். ஆளைப் பார்த்தபோதே அசடு தட்டிற்று. பார்க்கலாமென்று பேச்சுக்கொடுத்தான். ஒன்றும் புதிதாய் வரவில்லை. அவர் சொன்னதனைத்தும் பழைய சரக்கு—மாமூலானவை. இவ்வளவுதானா என்று விநாயகன் வீடு திரும்பினான். இந்த சவர்க்கார்—அகாமி சந்திப்பைச், சர்க்கார், பிரமாதப்படுத்திச், சவர்க்கார், தனது அரசியல் தத்துவத்தை அகாமியயோகியிட மிருந்துதான் கற்றான். அகாமியயோகிதான், சவர்க்காரின் அரசியல் குரு என்றெல்லாம் பிரசித்திபெற்ற ரௌலட் ரிப்போர்டில் வரைந்து தள்ளிவிட்டார்கள். இதைப்படித்த விநாயகன் விழுந்து விழுந்து சிரித்தான். உங்களுக்கும் சிரிப்பு வருகிறதல்லவா? அட முட்டாள் தனமே! அகாமியாவது, அரசியலாவது? சவர்க்காராவது, சிஷ்யனாவது?

சாமாஜி கிருஷ்ணவர்மா விடமிருந்து, சவர்க்காருக்குப் பணங் கொடுத்தனுப்பும்படி திலகருக்குத் தகவல் வந்தது. திலகர் அதன்படி செய்துவிட்டுப், பின் வருங் கடிதத்தைச் சாமாஜி வர்மாவுக்கனுப்பினர்:—

பண்டித சாமாஜி கிருஷ்ணவர்மா, எம். ஏ. அவர்களுக்கு,
லண்டன்.

புனு, 25 மே 1906.

நண்பரவர்களே!

தாங்கள் எழுதியவாறு, திரு. சவர்க்காருக்கு நானூறு ரூபாவுக்கு உண்டியலொன்று கொடுத்திருக்கிறேன். நாளை மெயில் கப்பலிற் புறப்படுகிறார். இத்துடன் முத்திரைத் தாளில் உங்கள் நகல்படி எழுதி வாங்கியிருக்கிற அவருடைய ஒப்பந்தப்பத்திரமும் அடக்கஞ் செய்யப்பட்டிருக்கிறது.

இப்படிக்குத் தங்கள் உண்மையுள்ள,
**பால கங்காதர திலகன்.**

விநாயகன் புறப்பாடானுன். நாஸிகை நகரம், நல்ல பிரிவு கொடுத்தது. பத்திரங்களும், வாழ்த்துக்களும், மாலைகளுங் குவிந்தன. **சவர்க்காரின் நாஸிகை** என்று சொல்லப் படும் பெருமைக்கும் புகழுக்கும் பாத்திரமாய், அந்த நகரம் அன்று திகழ்ந்தது.

அடுத்த பாகம்,
**கடல் தாவு படலம் முதல்.**
அச்சில்.
ஆர்டருக்கு முந்துங்கள்!

V. சுப்புராயலு நாயுடு பிரஸ், 90, மேலமாரட் தெரு, மதுரை-'40.

அடுத்த பாகம்,

**கடல் தாவு படலம் முதல்.**

அச்சில்.

ஆர்டருக்கு முந்துங்கள் !

V. சுப்புராயலு நாயுடு பிரஸ், மதுரை-'40.